Regd. No. M. 4392



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras



# அரவிந்த்

## நாள்பட உழைக்கும் துல்லிய ஆடைகள்

எல்லா நிதுச உடைகளுக்கும் உதவும் உயர்ந்த செவுத் துணிகளைத் தயாரிப்பதில் பிரசித்தி பெற்ற மில் முத்திரையைப் பாருங்கள்.

நூல் சேலை ★ வேஷ்டி ★ ஷர்ட்டிங்கு ★ டுவில்
க்ரேப்பு ★ பாப்ளின் ★ நேன்ஸுக் ★ மல்
லைன் ★ டோரியா ★ வாயில்

அரவிந்த் மில்ஸ் லிமிடெட்,
அஹமதாபாத்

வியாபாரிகளும், விற்பனையாளர்களும்
[illegible]

AY. 9—Tamil

# எப்பொழுதும் அவளை கவனித்துக் கொண்டிருக்க முடியாது





## —ஆனால் அவளை 'அழுக்கு அபாய'த்திலிருந்து காப்பாற்றலாம்

உங்கள் கண் எதிராக விளையாடின பருவம் கடந்து விட்டது. அவள் இப்பொழுது தானாகவே விளையாடவோ, தின்பண்டம் வாங்கவோ அல்லது இதர குழந்தைகளுடன் விளையாடவோ விரும்புகிறாள். ஆனால் வீடு திரும்பும் பொழுது அழுக்கு படிந்து, வியர்த்து வருகிறாள். அவளுக்கு லைப்பாய் பழக்கத்தை (அதாவது தவறாமல் லைப்பாய் ஸோப்பால் சுத்தம் செய்து கொள்ளும் முறையை)க் கற்பித்தால் அவளை அழுக்கு ஒன்றும் செய்யாது. இது மிகவும் முக்கியமானது. ஏனென்றால் அழுக்கில் நோயை விளைவிக்கக் கூடிய கிருமிகள் இருக்கின்றன லைப்பாய் ஒருவித கிருமி நாசன ஸோப். ஆரோக்கியத்தை ரக்ஷிக்கவல்ல அபூர்வ தன்மை வாய்ந்த ஸோப் இந்தியாவிலேயே அது ஒன்று தான் அதுதான் அதன் உலகப் பிரசித்திக்குக் காரணம்.

**லைப்பாய்** நல்ல ஸோப்பைக் காட்டிலும் சிறந்தது அது ஒரு நல்வழக்கம்




L. 32-50 TM — LEVER BROTHERS (INDIA) LIMITED

# மூட்டையைக் காணோம்!

பாலன்

★ வேம்பு அய்யர் ஒருசமயம் தம் குடும்பத்தோடு வைத்தீசுவரன் கோயிலுக்குப் புறப்பட்டார். 7½ டிக்கட்டு! அதற்குத் தகுந்த மூட்டை முடிச்சுக்கள்! கேட்க வேண்டுமா அய்யர்வாளின் உத்வேகத்தை? எல்லார் மீதும் எரிந்து எரிந்து விழுந்தார். சாமான்களை எத்தனையோ தடவை எண்ணினார்.

ஒவ்வொரு தடவையும் அப்பா சாமான்களை எண்ணக் கிளம்பும் போதும் அம்பி குறுக்கிட்டு, "அப்பா... ......!" என்று ஆரம்பிப்பான். "நீ சும்மா இருக்கமாட்டே, பயலே!" என்கிற சப்தம் எழுந்தவுடன் அவன் வாயடைத்துப் போய் விடும்.

சாமான்கள் எல்லாம் இறக்கியானதும் ஒரு கணமேனும் தாமதியாமல் வேம்பு அய்யர் சாமான்களை எண்ணிப் பார்த்தார். எத்தனை தடவை எண்ணினாலும் ஒரு சாமான் குறைந்தது.

வேம்பு ஐயருக்கு வந்த கோபத்தில் தன் பெண்டு பிள்ளைகளை ஒரு அத்தியாயம் திட்டி விட்டு, மறுபடியும் ஒரு தடவை விரலால் தொட்டுத் தொட்டு ஒவ்வொரு சாமானாக எண்ணிக் கொண்டே வந்தார். என்ன பிரயோஜனம்? ஒரு சாமான் காணாமற் போனது போனதுதான்.

இவ்வளவு அமளி துமளியில், அம்பிக்கு முதுகு ஊறியது போலிருக்கிறது. "அப்பா ... !" என்று மெதுவாக ஆரம்பித்தான்.

வேம்பு ஐயர் தம் கோபத்தையெல்லாம் அம்பியின்மேல் காட்ட யத்தனித்த சமயம், அம்மா இடை மறித்து அம்பியைக் காப்பாற்றினாள். "குழந்தையை எதற்காக இப்படிக் கரிக்கிறீர்கள்? அவனும்தான் ஊரை விட்டுக் கிளம்பினது முதற்கொண்டு உங்களிடம் என்னவோ சொல்ல வாயெடுக்கிறான்" என்றாள்.

"சரி, அம்மா ஆர்டர் போட்டு விட்டாள். சொல்ல வந்ததைச் சொல்லித் தொலையேண்டா" என்றார் வேம்பு அய்யர்.

"இல்லையப்பா. வந்து ....நான் அப்பவே சொல்ல வந்தேன்" என்று இழுத்தான்.




தகப்பனார் :—தயவு செய்து இந்த வருஷம் மட்டும் நம்ப பையனைச் சற்றுத் தூக்கிப் போடுங்கோ.

உபாத்தியாயர் :—உங்கள் பையனைத் தூக்கிப் போடச் சிரமப்படும் போலிருக்கே, ஸார்!

"அறைவேன் பயலே! சாமானைக் காணும் சாமானைக் காணும் என்று இங்கே நான் திண்டாடிக் கொண்டு இருக்கிறேன். அப்பவே சொன்னானாம் அப்பவே!"

"இல்லை அப்பா, நான் அப்பவே, தோசை கட்டிக் கொண்டு வந்த மூட்டையைக் கணக்கிலே சேர்க்காதே, அப்புறம் எண்ணிக்கை சரியாக வராது என்று சொல்லலாம் என்று இருந்தேன். நீங்க தான் அடிக்க வந்தேளே?" என்றான்.

அம்பிப் பயல் சொல்லி முடிவதற்குள் வேம்பு அய்யருடைய கோபமெல்லாம் சிட்டாய்ப் பறந்துபோய் விட்டது. "ஆமாண்டி, இது தெரியாமல் போச்சு பார்த்தாயோ? கொண்டு வந்த தோசையை, எல்லாருமா சாப்பிட்டு விட்டு, துணியை உதறிப் பழக் கூடையில் திணித்தோமே, அது யாருக்காவது நினைவில் பட்டதோ?" என்று சொல்லி அம்பிப் பயலின் முதுகில் கை வைத்தார். ஆனால் அது ஒரு சொகுசான 'ஷொட்'டாகத்தானிருந்தது.

வைக்கிறேனு, பார்!" என்று அவன் தன் மனதுக்குள்ளேயே உறுமிக் கொண்டான்.

மறுநாள் சொக்கியும் முருகேசனும் ஆட்டுப்பட்டி என்னும் கிராமத்தில் இருப்பதாகத் தகவல் கிடைத்தது. உடனே, கத்தியும் கையுமாக ஆட்டுப்பட்டியை நோக்கி நடந்தான் தங்கமுத்து.

## 3

"அடேய், முருகேசா! அகப்படமாட்டோம்னு நினைச்சுக்கிட்டியா? கதவைத் திறடா!" என்று கத்தினான் தங்கமுத்து.

கிராமத்துப் பெண்களுக்கே இயற்கையான குணத்துடன் முருகேசனைப் பின்னுக்குத் தள்ளிவிட்டு, தானே வந்து கதவைத் திறந்தாள் சொக்கி. தன் தந்தையின் கையிலிருந்த கத்தியைப் பார்த்ததும் அவள் "ஐயோ!" என்று அலறினாள்.

"ஐயோன்னு சொல்றே? எத்தனை நாளாக் காத்துக்கிட்டு இருந்தே, எனக்கு இப்படி அவமானத்தைத் தேடி வைக்க?"

"நான்தானே அப்பா, உனக்கு அவமானத்தைத் தேடி வச்சேன்? என்னை வேணும்னு கொன்னுப்பிடு!"

"உன்னைக் கொன்னுப்பிடறதா! என் குலத்தைக் கெடுத்தவன் அவன் தானே? எங்கே அவன்?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே விரைந்து நுழைந்தான் தங்கமுத்து.

சொக்கி ஓடோடியும் சென்று அவனைப் பிடித்துக் கொண்டு, "அப்பா! நான் சொல்றதைக் கேளு, அப்பா! என்னதான் பண்ணினாலும் இனிமே கெட்ட பால் நல்ல பாலா ஆகப் போறதில்லே! அவரைக் கொன்னுட்டா யாருக்குக் கஷ்டம்? எனக்குத்தானே? நான் கஷ்டப்பட்டா உனக்குக் கஷ்டமா யிராதா, அப்பா?" என்று கேட்டாள்.

அதைக் கேட்டதும் தங்கமுத்துவின் கையிலிருந்த கத்தி கீழே நழுவி விழுந்தது. அவன் தன் இரு கரங்களாலும் தலைமயிரைப் பிய்ப்பதுபோல் பிடித்துக் கொண்டு வெளியே வந்தான். அப்பொழுது எதிர்பாராத விதமாக அவனுக்கு எதிரே வந்த தருமலிங்கம், "எங்கேடா, என் பிள்ளை?" என்று இரைந்து கேட்டான்.

குரல் ஒலியிலிருந்து தன்னுடைய தந்தை என்பதை ஊகித்துக் கொண்ட முருகேசன், "இதோ இருக்கிறேன், அப்பா!" என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்தான். அவனைக் கண்டதும், "ஏண்டா, என்னை இப்படி ஊர் சிரிக்க வைக்கணும்னு எத்தனை நாளா நினைச்சுக்கிட்டு இருந்தே?" என்று கேட்டான் தருமலிங்கம்.

"நானா அப்பா சிரிக்க வைச்சேன்?"

"பின்னே யாருடா?"

"நீதானே அப்பா சிரிக்க வச்சுக்கிட்டே? நான் வேணாம், வேணாம்னு சொன்னாக் கூடப் பெரிய இடத்திலே பெண்ணைப் பார்த்தே!........."

அவன் சொன்னது தருமலிங்கத்துக்கு நியாயமாகப் பட்டது. ஆகவே, அவன் "சீ, அதிகப் பிரசங்கிக் கழுதை!" என்று அவனை ஆசையுடன் திட்டிவிட்டு, "இப்போ மானம் போறதேடா, அதுக்கு என்ன பண்றது?" என்று கேட்டான்.

"எங்க ரெண்டு பேருக்கும் கல்யாணத்தைப் பண்ணிடு, அப்பா!"

இதைக் கேட்டதும் தருமலிங்கம் சிரித்து விட்டான். அப்பொழுது அவன் காலில் வந்து விழுந்தாள் சொக்கி.

தருமலிங்கம் தங்கமுத்துவின் தோளின் மேல் கையைப் போட்டுக்கொண்டு, "நடந்ததையெல்லாம் மறந்துடு! தொச்சம் ஒரு வண்டியைப் பாரு; ஊருக்குப் போகலாம். நாளைக்கு ஒரு முகூர்த்தம் இருக்குதாம். அதே முகூர்த்தத்திலேயே நாலு பேருக்கு முன்னால் கல்யாணத்தைப் பண்ணிக் கண்ணாலே பார்க்கலாம்!" என்றான்.



"நல்லாக் கேட்டே! கஷ்டப்பட்டுக் கொண்டு யார் இருப்பா? அதுக்காக நம்ம உசிரை விட்டுட வேண்டியதுதான்!"

"நல்லாச் சொன்னே! ஆமாம்; என்னைக் கேட்டியே, நீ மாத்திரம் எப்படி உங்க அப்பா, அம்மாவை விட்டுட்டு என்னோடு வந்திடுவே?"

"நானுன்னு பொம்மனாட்டி! என்னிக் காவது ஒரு நாள் நான் எங்க அப்பா, அம்மாவை விட்டுட்டுப் பிரிய வேண்டியவ தானே?"

"சொக்கி! நீ எம்மட்டுப் புத்திசாலியா யிருக்கே!" என்று சொல்லிக் கொண்டே அவளுடைய கன்னத்தை லேசாகக் கிள்ளிச் சிரித்தான் முருகேசன்.

## 2

மறு நாள் சொக்கியின் வீட்டில் ரகளை. "வெளியே தலைகாட்ட முடியலியே, என்ன பண்றது?" என்று சொக்கியின் தந்தையான தங்கமுத்து, தன் மனைவி பாக்கியத்தின் மீது எரிந்து விழுந்தான்.

"என்மேலே கோவிச்சுக்கிட்டு நான் என்ன பண்ணுவேன்?"

"என்ன பண்ணுவேன்னு என்னைக் கேட்கிறே? எல்லாம் உன்னாலே வந்தது தான்!"

"என்னாலே என்ன வந்தது?"

"என்ன வந்ததா? எதிர்த்த வீட்டிலே இருக்கிற பையனைக் கூப்பிட்டு, நல்லதங்காக் கதை படி, ராஜாதேசிங்கு கதை படி, அதைப் படி, இதைப் படின்னு படிக்கவச்சிப் பெண்ணைக் கெடுத்துட்டே!"

"நான்தானு படிக்கச் சொன்னேன்? நீயுந்தானே படிக்கச் சொன்னே!"

"என்னமோ நல்ல பிள்ளைன்னு பார்த்தேன்; இப்படிச் செய்வான்னு எனக்குத் தெரியுமா? இப்போ மானம்போகுது!"

இந்தச் சமயத்தில் அங்கே வந்த முருகேசனின் தந்தையான தருமலிங்கம், "மானமாடா போவுது? மரியாதையா என் பிள்ளையைக் கூட்டிக் கிட்டு வாயா, இல்லையா? இல்லேன்னு, வீட்டைக் கீட்டையெல்லாம் கொளுத்தி, உன்னை ஊரை விட்டே விரட்டிடுவேன்!" என்று இரைந்தான்.

"நான் எங்கே போய் உங்கப் பிள்ளையைக் கூட்டிக்கிட்டு வருவேன்?"

"என்டா, என்னிடமா நீ கத்த வித்தையைக் காட்டிப் பார்க்கிறே? பெரிய பண்ணைக் காரன் மவன் வாட்ட சாட்டமா இருக்கான்னு பெண்ணைச் சேர்த்து வச்சுட்டியா?"

"ஐயய்யோ! என்னதான் ஏழையா யிருந்தாலும் எங்கமேலே இப்படியா பழி போடறது?" என்று கேட்டாள் பாக்கியம்.

"பழியா போடறேன், பழி! இன்னிக்கு சாயங்காலத்துக்குள்ளே என் மவனைக் கூட்டிக்கிட்டு வந்தாலாச்சு; இல்லாட்டா அப்புறம் என்ன நடக்கிறதுன்னு பாரு!" என்று தோளின் மீதிருந்த துண்டை விறைப்புடன் எடுத்துக் கக்கத்தில் வைத்துக்கொண்டு நடந்தான் தருமலிங்கம்.

* * *

தன்னுடைய பெண் தனக்குத் தேடி வைத்த அவமானத்தை நினைத்து ஏற்கனவே வருந்திக் கொண்டிருந்த தங்கமுத்துவுக்கு, தருமலிங்கத்தின் வார்த்தைகள் தாங்க முடியாத ஆத்திரத்தைக் கொடுத்தன. "உனக்குப் பிள்ளையாடா வேணும்? என்குலத்தைக் கெடுத்த அவனை உசிரோடு



# சொக்கி

விந்தன்



தவழ்ந்து விளையாடிக் கொண்டு வந்த காற்றில் பச்சைப்பசேலென்றிருந்த கதிர்கள் அசைந்தாடிக் கொண்டிருந்ததைப் பார்க்கும்போது, அவை "சாய்ந்தாடம்மா, சாய்ந்தாடு!" என்று பரமானந்தமாகப் பாடுவது போலிருந்தது. அந்த அழகைப் பார்த்த வண்ணம் களத்து மேட்டிலிருந்த வேலியின் அருகில் உட்கார்ந்திருந்தான் முருகேசன். அந்தச் சமயத்தில் அவனுக்குக் கொஞ்சம் தூரத்தில் அறுவடை வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்த சொக்கியின் சொக்க வைக்கும் கண்கள் முருகேசனைக் கவனித்து விட்டன. உடனே கண்ணன் குழலோசை கேட்ட கன்னிகையைப் போல், ஒவ்வொரு அங்க அசைவிலும் அழகு தோன்ற மெல்ல அவனை நெருங்கினாள். அவள் தன்னை நெருங்கியதும், "சொக்கி! உனக்குச் சங்கதி தெரியுமா?" என்று கேட்டான் முருகேசன்.

"என்ன சங்கதி?"

"எனக்குக் கல்யாணம்."

"உனக்கா கல்யாணம்?"

"ஆமாம்."

"பெண்ணு எங்கே?"

"பெரிய இடத்திலே!"

"பெரிய இடம்னு?"

"அப்படித்தான் எங்க அப்பா சொன்னாரு!"

"அப்பான்னு......"

"நீ இல்லேன்னு அர்த்தம்!"

"அப்போ நான் சின்ன இடத்துப் பெண்ணு?"

"ஆமாம்."

"நல்ல வேடிக்கைதான்!"

"என்ன வேடிக்கை?"

"பாடு படுகிறவன் வீட்டுப் பெண்ணு சின்ன இடத்துப் பெண்ணு; அவன் பட்ட பாட்டிலே வயிற்றை வளர்க்கிறவன் வீட்டுப் பெண்ணு பெரிய இடத்துப் பெண்ணு?"

"அப்படித்தான் இருக்குது, நியாயம்! அதுக்குத்தான் நான் இப்போ உனக்கு ஒரு யோசனை சொல்லப் போறேன்; நீ கேட்பயா?"

"சொல்லேன்; நான் கேட்காப் போனாலும் என் காது கேட்டுட்டுப் போகுது!"

"விளையாடாதே, சொக்கி! இப்போ எனக்கு ரொம்ப வருத்தமா யிருக்குது."

"என்னாத்துக்கு வருத்தம்?"

"வேறே என்னாத்துக்கு வருத்தம்? உன்னைக் கல்யாணம் பண்ணிக்க முடியலையேன்னுதான் வருத்தம்!"

"அதுக்கு நீ என்ன செய்யப் போறே?"

"என்ன செய்யறது? நீதான் சொல்லேன்!"

"நீதான் சொல்லேன்!"

"அதான் சொல்ல வந்தேன். இன்னிக்கு ராத்திரி நம்ப ரெண்டு பேரும் ஒருத்தருக்கும் தெரியாம எங்கேயாச்சும் ஓடிப் போயிடலாம்......"

"ஐயையோ! எனக்கோசரம் உங்க அப்பா, அம்மா, அவுங்க சொத்து சுத்து எல்லாத்தையும் விட்டுட்டா வந்திடுவே?"

"அதுக்குப் பார்த்தா நாம் எப்பொழுதுமே சந்தோஷம் இல்லாம, சதா கஷ்டப் பட்டுக்கொண்டே இருக்க முடியுமா?"

# படித்துப் பார்!

## புஷ்பஹாரம்

[ஆசிரியர்: ஸ்ரீமதி ஜயலக்ஷ்மி ஆர். ஸ்ரீனிவாசன். பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை. விலை: ரூ 1—8—0]

சுதேசமித்திரன் ஆசிரியர் ஸ்ரீ ஸி. ஆர். ஸ்ரீனிவாஸன் இப் புஸ்தகத்திற்கு அளித்திருக்கும் முன்னுரையில் தமது ஆச்சரியத்தைப் பின்வருமாறு தெரியப் படுத்துகிறார்.

"ஆசிரியர் பிறந்த இடமோ பெரிது; புகுந்த இடமோ பெரிது. வாழ்வின் ஏற்றத் தாழ்வுகளை அனுபவ பூர்வமாக அறியக் காரணம் இல்லை. இருந்தாலும் அநாயாசமாய் உலகத்தையே அளந்து கட்டியிருப்பதுதான் ஆச்சரியமா யிருக்கிறது." உலகத்தையே அளந்து கட்டக் கூடியவர் இந்த புஷ்பஹாரத்தைத் திவ்யமாகக் கட்டி யிருப்பதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. புஷ்பஹாரத்திலுள்ள மலர்களைப்போலவே இக்கதையில் வரும், சரஸ்வதி, ஜானகி முதலிய கதாபாத்திரங்கள் மென்மையும் மணமும் பொருந்தியவர்களாக இருக்கிறார்கள்.

## ஆசியாவின் எதிர்காலம்

[ஆசிரியர்: ஏ. ஜி. வெங்கடாச்சாரி; பிரசுரம்: ஆசிய ஜோதிப்பிரசுரம், மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 1—4—0.]

ஆசிய நாடுகள் எல்லாம் சுதந்திர நாடுகளாக இருக்கவேண்டும்; ஆசிய மக்கள் சௌகர்யமா யிருக்கவேண்டும்—என்ற ஆசையைப் புள்ளி விவரங்களுடனும், மேற்கோள்களுடனும் ஆசிரியர் இப்புஸ்தகத்தில் வெளியிட்டிருக்கிறார். "இந்தியாவை இப்பொழுதே விடுவித்தாக வேண்டும். தலைவர்களைச் சிறையிலிருந்துவிட்டு தேசிய சர்க்காரை ஏற்படுத்த வேண்டும்" என்று கேட்கும் ஆசிரியர் "மலேயாவும், இந்தோசீனாவும், டச்சுத் தீவுகளும் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குள் பரிபூரண சுதந்திர நாடுகளாகி விடுமென அறிவிக்கப்பட வேண்டும்" என்று கேட்பதுதான் நமக்குப் புரியவில்லை. அவைகளும் இந்தியா போலவே ஏன் உடனே சுதந்திரம் அடையக்கூடாது? கேட்பதையாவது தாராள புத்தியுடன் கேட்கலாமல்லவா?

## ஸ்ரீ சங்கர ஜயந்தி

### வெள்ளி விழா மலர்

[பிரசுரம்: மதுரை அத்வைத சபை. விலை: அணா 12.]

ஸ்ரீமத் சங்கர ஜயந்தி மஹோத்ஸவத்தை ஒவ்வொரு ஆண்டும் விடாது நடத்தி வர வேண்டும் என்ற சங்கல்பத்துடன் மதுரை அத்வைத சபையினர் இதுவரை இருபத்தைந்து வருஷங்கள் விடாது இந்த மஹோத்ஸவத்தைக் கொண்டாடி யுள்ளனர். அந்த ஞாபகமாகத்தான் இம் மலரையும் வெளியிட்டிருக்கின்றனர். சாஸ்திர ரத்னம் பிரம்மஸ்ரீ தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரிகள், திவான் பகதூர் கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரிகள், ராவ் பகதூர் டாக்டர் டி. எஸ். திருமூர்த்தி முதலிய பல ஆஸ்திக சிரோன்மணிகள், தமிழ், ஸம்ஸ்க்ருதம், ஆங்கிலம், ஆகிய மூன்று மொழிகளிலும் பகவத் பாதாளைப் பற்றியும், நமது தர்மம் முதலியவற்றைப் பற்றியும் கட்டுரைகள் எழுதி வெளுத்து வாங்கி யிருக்கிறார்கள்.

## காதலர் உள்ளம்

[ஆசிரியர்: பிரபல ஜெர்மன் நாவலாசிரியரான லியானார்ட் பிராங்க். மொழிபெயர்த்தவர்: எம். எஸ். சபரிராஜன். பிரசுரம்: நவயுகப் பிரசுராலயம், காரைக்குடி. விலை: ரூ 1—12—0]

ஜெர்மனியில் இந்தக் கதை படமாக எடுக்கப்பட்டுள்ளது. இன்னும் அநேக இந்திய பாஷைகளிலும் மொழிபெயர்க்கப் பட்டுள்ளது. இதிலிருந்தே இந்தக் கதை மேன்மையான கதைதான் என்று தெரிந்து கொள்ளலாம். இந்த ஆசிரியரின் புத்தகங்கள் அனைத்திற்கும், ஜெர்மன் சர்க்கார் இப்பொழுது தடை விதித்துள்ளனர் என்பதிலிருந்தே இந்த நூலாசிரியர் ஒரு பிரபல ஆசிரியர் என்று நாம் ஊகித்துத் தெரிந்து கொள்ளலாம். நல்ல கதை. நல்ல ஆசிரியர், நல்ல மொழி பெயர்ப்பு. இன்னும் உங்களுக்கு வேறு என்ன வேண்டும்?

---

★

## அத்தனை நேரம்!

பையன்:—அப்பாடா! கழுத்து எத்தனை நீளம்! காலம்பற சாப்பிடுகிற சாப்பாடு மத்தியானம் தான் வயிறு வந்து சேரும்.

★



# இந்தியன் மியூசுவல் லைப் அஸோஸியேஷன் லிமிடெட்.,

தலைமை ஆபீஸ் :

**10, மவுண்ட் ரோடு, மதராஸ்.**

●

1943-ம் வருஷம் நவம்பர் மாதம் 1-ம் தேதி முதல் குஜராத், கத்தியவார் முதலிய இடங்களுக்கு அகமதாபாத் மெஸர்ஸ். ஹிந்துஸ்தான் டிரேடர்ஸ் கம்பெனியாரை எமது பிரதம ஏஜண்டுகளாக நியமித்துள்ளோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ஏஜண்டுகளும், ஆர்கனைசர்களும் தேவை. தொழில் உத்தரவாதத்திற்கு ஏற்றபடி சம்பளம் கொடுக்கப்படும்.

குஜராத், கத்தியவார் முதலிய பிரதேசங்களுக்கு ஏஜன்ஸி விஷயமாய் எங்களது கீழ்க்கண்ட பிரதம ஏஜண்டுகளுக்கு எழுதவும்.

●

**மெஸர்ஸ். ஹிந்துஸ்தான் டிரேடர்ஸ்**

இந்தியன் மியூசுவல் லைப் பிரதம ஏஜண்டுகள்

**எக்ஸ்சேன்ஜ் பில்டிங்ஸ்**

காந்தி ரோடு :: அஹமதாபாத்

---

**சகல விதமான**
**வலிகளையும்**
**10 நிமிஷங்களில்**
**நிறுத்த**



# வழி பண்ணுதல்













# மூடத் தைமூர்

ஜயா

எப்பொழுதும் கோலாகலத்துடன் விளங்கி வந்த அரண்மனை அன்று ஒரே அழுகை மயமாக இருந்தது. யாரைப் பார்த்தாலும் அழுது கொண்டிருந்தார்கள்.

அப்பொழுது மூடத் தைமூர்தான் அரசன். அவன் கொடூரமான ஹிருதய முடையவன் என்று சரித்திரம் கூறின போதிலும் உண்மையில் மிகவும் மென்மையான ஹிருதயம் படைத்தவன்.

ஒரு நாளுமில்லாமல் அன்று காலையில் முகம் பார்க்கும் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்தான். கண்ணாடியில் தெரிந்த உருவத்தைப் பார்த்தவுடன் அவனுக்கு ஆச்சரியமாய்ப் போய்விட்டது. இந்த விகார முகம் உள்ளவர்களும் இருக்கிறார்களா என்று திரும்பிப் பார்த்தான். ஒருவரும் இல்லாது போகவே, ''என்ன இவ்வளவு மோசமாகவா இருக்கிறது நம் முகலக்ஷணம்?'' என்று அவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கண் கலங்கி விட்டான். நீர்த்திவலைகள் சில கண்களின் ஓரத்தில் தங்கி நின்றன.

அரசன் கண்கலங்கி இருப்பதைப் பார்த்த அவனுடைய சிப்பந்திகள். எல்லோரும் அழ ஆரம்பித்து விட்டார்கள் அரசன் அழுவதன் காரணம் என்னவென்று தெரிந்து கொள்ளாமல் விக்கி விக்கி அழுதார்கள். விழுந்து விழுந்து அழுதார்கள்.

மற்றவர்கள் மனம் வருந்தும் சமயத்தில் அவர்களுக்குச் சிரிப்பு மூட்டி உற்சாகப் படுத்துவதற்காக அரண்மனையில் அமர்த்தப் பட்டிருந்த விதூஷகனும் அழ ஆரம்பித்து விட்டான். அவன் அன்று அழுத அழுகை கொஞ்ச நஞ்சமல்ல.

தைமூர் தன்னுடைய அழுகையை நிறுத்து வதற்கு சுமார் ஒரு மணி நேரம் ஆயிற்று. அதுவரை எல்லோரும் அழுது கொண்டிருந்தார்கள். அரசன் அழுகையை நிறுத்தியதைப் பார்த்ததும் ஒவ்வொருவராக அழுகையை நிறுத்தலாயினர்.



ஆனால் விதூஷகன் மட்டும் தன் அழுகையை நிறுத்தவேயில்லை. இன்னும் அழுது கொண்டேயிருந்தான்.

தைமூரே அவனிடம் சென்று அவனுக்குத் தேறுதல் கூறவேண்டியிருந்தது.

அப்படியும் அவன் அழுகையை நிறுத்தவில்லை. ''உங்கள் முகத்தை ஒரு நிமிஷம் கண்ணாடியில் பார்த்து விட்டு அதற்காக நீங்கள் ஒரு மணி நேரம் அழுதீர்களானால் உங்களை வருஷக் கணக்காகப் பார்த்துக் கொண்டேயிருக்கும் நாங்கள் எவ்வளவு மணி நேரம் அழ வேண்டும்?'' என்று கேட்டு விட்டு மேலும் மேலும் அழுது கொண்டேயிருந்தான் விதூஷகன்!

# இந்தியத் தேயிலையில் மிகச்சிறந்தது




# லிப்டன்ஸ்

## ஜாசஜா, வெள்ளை லேபில்:
## தேயிலைப்பெண் தரங்கள்

---

ஆனந்தமாக லிப்டன் தேனீர் அருந்தும்போது பொறுப்பற்ற பேச்சுகளைப் பேசாதீர்கள்.

செய்தேன். அதற்கு மேலாவது கடிதங்கள் எழுதினேனா?" என்றலறினான். கிழவர் அவனை மங்களத்தின் பக்கத்தில் விட்டு விட்டுப் போய்விட்டார்.

ராதாகிருஷ்ணன் மங்களத்தின் பக்கத்தில் உட்கார்ந்து அவள் நெற்றியில் கையை வைத்தான். மங்களம் ஸ்மரணையற்றிருந்தாள். உடம்பு தணலாய்க் காய்ந்து கொண்டிருந்தது. ராதாகிருஷ்ணன் தன் கையால் அவள் மயிரைக் கோதிய வண்ணமே, 'மங்களம், மங்களம்' என்றழைத்தான். வெளுத்துக் கிடந்த அவள் முகத்தில் சிறிது களை தோன்றியது. அவள் உதடுகள் அசைந்தன. "நாதா! ஏன் என்னை இப்படி உதாசீனம் செய்கிறீர்கள்? இப்பொழுது தான் உங்கள் குறை தீரும் காலம் வந்து விட்டதே. நான் அப்பொழுதே சொல்லவில்லையே என்று கோபமா? ஆமாம். நீங்கள் என்னைக் கோபித்துக் கொள்வது நியாயம்தான். பாவி அப்பொழுதே சமாசாரத்தைச் சொல்லியிருந்தால் இவ்வளவு தூரம் வந்திருக்குமா! எல்லாம் என்னுடைய அகம்பாவத்தினால் தான் வந்தது. ஐயோ! எனக்கு மன்னிப்பு உண்டா?"

மங்களத்தின் வாயிலிருந்து இவ்வாறு வார்த்தைகள் வெளிப்படவே ராதாகிருஷ்ணனால் துக்கத்தை யடக்க முடியவில்லை.

"மங்களம்! மங்களம்! என்னை மன்னிப்பாயா?" என்றலறி அழுதுவிட்டான். அந்த அலறலைக் கேட்டதும் மங்களத்தின் முகத்தில் திடீரென்று இரத்த ஓட்டம் ஏற்பட்டது. அவள் கண்கள் மெதுவாய்த் திறந்தன. பக்கத்தில் தலையணையில் முகத்தைப் புதைத்துக்கொண்டு அழும் ராதாகிருஷ்ணனை வெறிக்கப் பார்த்தாள். அவள் கண்களில் ஓர் அபூர்வ ஒளி தோன்றியது. "யார் நீங்களா? அப்படியானால் அந்தத் தந்தி ......" என்று சொல்லி அவனைத் தடவிப் பார்த்தாள்.

"ஆம் மங்களம். பாவி நான்தான். தந்தி வந்தது பொய். இறந்தது வேறு ராதாகிருஷ்ணன். நானல்ல!" என்றான்.

மங்களத்தின் கண்களில் ஆனந்த பாஷ்பம் வடிய அவன் கால்களை எடுத்து மார்பில் அணைத்துக் கொண்டாள்.

# பழிக்குப் பழி!







## ஒருவாரம் கழித்து






க்ஷீணமாய்க் கொண்டே வந்தது. விடியற் காலையில் எழுந்திருக்க முடியாமல் இரைப்பும் மயக்கமும் வந்துவிடும்.

ஒரு வாரத்தில் எழுந்து நடமாட முடியாத நிலைமைக்கு வந்து விட்டாள். ராதாகிருஷ்ணன் டாக்டரிடம் உடம்பைக் காண்பிக்கலாம் என்று எவ்வளவோ சொல்லியும் அவள் கேட்கவில்லை. 'என் உடம்புக்கு அப்படியொன்றும் வந்து விடவில்லை. எல்லாம் சரியாய்ப் போய் விடும்' என்று சொல்லிவிட்டாள். முன்பிருந்த ராதாகிருஷ்ணனாயிருந்தால் உடனே டாக்டரை வரவழைத்திருப்பான். ஆனால் அவன்தான் அடியோடு மாறி விட்டானே? மங்களம் இவ்வாறு சொல்லவே 'சரி' யென்று பேசாமலிருந்து விட்டான்.

மங்களத்திற்கு உடம்புக்கு வந்ததிலிருந்து ராதாகிருஷ்ணனுக்கு வாழ்க்கையிலிருந்த வெறுப்பு மேலும் அதிகரித்தது. ஒருநாள் அவன் மங்களத்தைப் பார்த்து, "மங்களம், உனக்கோ உடம்பு நாளுக்குநாள் மோசமாகிறதே யொழியக் குணமாகிறதைக் காணோம். கொஞ்ச நாள் உன்னை உங்க பிறந்தாத்தில் விட்டு வைக்கலாமென்று நினைக்கிறேன். என்ன சொல்கிறாய்?" என்றான்.



"நான் போய்விட்டால் நீங்கள் சாப்பாட்டிற்கு என்ன செய்வீர்களாம்? ஹோட்டல் சாப்பாடே உங்கள் உடம்புக்கு ஒத்துக் கொள்ளாதே."

"அந்தக் கவலையெல்லாம் உனக்கு வேண்டாம். நான் அநேகமாய் ஆபீஸ் வேலையாய் பம்பாய்க்குப் போவேன். ஆபீஸிலும் என்னை மிலிடரியில் சேருகிறாயா என்று கேட்டுக்கொண்டிருக்கான். சேருவதென்று நிர்மானித்து விட்டேன்" என்றான்.

மங்களத்திற்குத் தூக்கிவாரிப் போட்டது. இந்த மாதிரி அவர் பண்ணுவார் என்று அவள் கனவிலும் நினைக்கவில்லை.

"என்ன, பெரிய வெடி குண்டாய்த் தூக்கிப் போடறேளே? உங்களுக்கு மிலிடரியில் சேரும்படியாய் என்ன வந்துவிட்டது? ஆபீஸில் கொடுக்கிற சம்பளம் போதவில்லையா?"

இதற்குமேல் அவளால் பேச முடியவில்லை. துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண்களில் கண்ணீர் மல்கியது.

"அதுக்கெல்லாம் உன்னை ஒருத்தரும் கேட்கவில்லை. நான் நிர்மானம் பண்ணினது பண்ணினதுதான்" என்று சொல்லி விட்டுப் போய்விட்டான்.

அழுகையை அடக்க முடியாமல் மங்களம் குழந்தைபோல் 'ஹோ' வென்று அழுது விட்டாள்.

அன்று இரவெல்லாம் தூக்கம் பிடிக்காமல் புரண்டு கொண்டிருந்தாள். தான் ஊருக்குக் கிளம்பு முன் தன் மனதிலுள்ள சந்தோஷத்தை, ஆம், தான் கூடிய சீக்கிரம் தாயாராகப் போகும் சந்தோஷ சமாசாரத்தை அவரிடம் சொல்லி விடலாமா என்று தோன்றியது. அப்பொழுது அவர் முகம் எப்படி மாறும், அவர்

தான். அதற்கப்புறம் அவனுக்கு அது அலுத்து விட்டது.'



வருடங்கள் பல சென்றன. ராதா கிருஷ்ணன் பொம்மைகள் வாங்குவதையே நிறுத்திவிட்டான். முன்பெல்லாம் ஆபீஸ் விட்டதும் நேரே வீட்டுக்கு வந்துவிடுவான். பாலுவுடன் விளையாடிக் கொண்டும் கொஞ்சிக்கொண்டுமிருப்பான். சாப்பிட உட்காரு முன் பாலுவை அழைத்து வந்து பக்கத் தில் உட்கார வைத்துக் கொண்டுதான் சாப்பிடுவான்.

ஆனால் இப்பொழுதோ ஆபீஸ் விட்டதும் வீட்டிற்கு வருவதற்கே அவனுக்கு வேதனையாயிருந்தது. ஆபீஸ் முடிந்ததும் ஊரெல்லாம் சுற்றிவிட்டு எட்டு அல்லது ஒன்பது மணிக்குத்தான் வருவான். சாப் பிட்டு விட்டுச் சீட்டாடப் போய்விடுவான். வாழ்க்கையையே வெறுத்தவன் போல அவன் காணப்பட்டான்.

ராதாகிருஷ்ணனின் சுபாவமே மாறிற்று என்றால் மங்களத்தைப் பற்றிக் கேட்க வேண்டியதில்லை. தன் கணவனே தன்னை உதாசீனம் செய்வதைப் பார்க்க அவளால் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. எப்பொழுதும் குறும்பும் புன்சிரிப்புமே விளையாடிக் கொண்டிருந்த அந்தக் கண்களில் சோகம் படர்ந்தது. காரியம் இருந்தாலன்றிப் பிறர் வீட்டிற்குப் போவதில்லை என்று சபதம் செய்து கொண்டாள்.

நவராத்திரி சமயம் எல்லோர் வீட்டி லிருந்தும் குழந்தைகள் வந்து தங்கள் வீட் டிற்கு மஞ்சள் குங்குமத்திற்கு வரும்படி மங் களத்தை அழைத்துவிட்டுப் போனார்கள். ஒரு பெண் "என் மாமி உங்காத்தில் பீரோ நிறைய பொம்மை வெச்சிண்டிருக்கேளே, என் கொலு வைக்கவில்லே?" என்றதும், மற் றொரு பெண், "இல்லேடி அந்த மாமிக்குக் குழந்தைகள் இல்லையோன்னோ, அதனால் தான் வைக்கவில்லே. இல்லாட்டா யார் போய் அழைப்பாளாம்" என்றது. இவ் வார்த்தையைக் கேட்டதும் மங்களத்திற்குச் சுருக்கென்றது. நவராத்திரி ஒன்பது நாட் களும் அவள் ஒருவர் வீட்டிற்கும் போக வில்லை. சரஸ்வதி பூஜையன்று மாத்திரம் ஓரிரண்டு வீடுகளுக்குப் போனாள். ஒரு வீட்டில் ஒரு அம்மாள்,

"என்னடி மங்களம்! பத்து நாளும் மஞ்சள் குங்குமத்துக்கு வரப்படாதோ? உனக்கு என்ன குஞ்சா, குழந்தையா?" என்றாள்.

மங்களத்திற்கு இவ் வார்த்தைகளைப் பொறுக்க முடியவில்லை. வீட்டிற்குப் போய்க் குப்புறப் படுத்துக்கொண்டு விசித்து விசித்து அழுதாள். கணவன்தான் உதா சீனம் செய்கிறான் என்றால் ஊர்ப் பேர்கூட கேக்கிறார்களே என்று வருத்தப்பட்டாள்.



இதே ஏக்கத்தினால்தானோ என்னமோ மங்களத்திற்கு அடிக்கடி உடம்புக்கு வர ஆரம்பித்தது. நாளுக்கு நாள் உடல் பல



# குறை தீர்ந்தது

பாரு

அன்று ஞாயிற்றுக் கிழமை. மத்தியானம் மங்களம் சாப்பிட்டு விட்டுத் தன் கணவனுக்குப் படுக்கையைப் போட்டு விட்டுப் படுத்துக் கொண்டவள் அப்படியே தூங்கி விட்டாள். சிறிது நேரத்திற்கெல்லாம் ஏதோ சத்தத்தைக் கேட்டு எழுந்து பார்த்தாள்.

அப்பொழுது ராதாகிருஷ்ணன் சமையலறையில் உட்கார்ந்து ஒரு கப்பல் பண்ணுவதில் ஈடுபட்டிருந்தான். பக்கத்தில் மூன்று அல்லது நான்கு வயதுள்ள பக்கத்து வீட்டு பானு நின்றுகொண்டு அவன் கப்பல் பண்ணுவதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள்.



கப்பல் பண்ணியானதும் ராதாகிருஷ்ணன், "பானு, கப்பல் பண்ணிக் கொடுத்ததற்கு மாமாவிற்கு என்ன கொடுக்கப் போகிறாய்?" என்றான். குழந்தை பானு கப்பலைக் கையில் வாங்கிக் கொண்டு அவனுக்கு அவசரமாக ஒரு முத்தம் கொடுத்து விட்டு ஓடிவிட்டாள். அன்றுதான் மங்களத்திற்குத் தன் கணவனுக்குக் குழந்தைகள் என்றால் உயிர் என்பது தெரிந்தது.

ஒரு முறை ராதாகிருஷ்ணன் வட இந்தியாவுக்கு வேலையாகப் போயிருந்தான். போய் விட்டுத் திரும்பும் பொழுது ஒரு பெட்டி நிறைய விளையாட்டுச் சாமான்கள் வாங்கி வந்திருந்தான்.

"மங்களம், பானுவுக்கு நல்ல கப்பல் ஒன்று வாங்கலாமென்று கடைக்குப் போனேன். அங்கு வித விதமான விளையாட்டுச் சாமான்களும், பொம்மைகளும் இருந்தன. அவைகளைப் பார்த்ததும் எனக்கே விளையாடணும் போலிருந்தது. ஆகையால் எல்லாவற்றையும் வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்" என்று பெட்டிக்குள் இருந்த பொம்மைகளை எடுத்து வைத்துக் கொண்டே சொன்னான்.

"இந்தப் பச்சைக் குழந்தைக்கு விளையாட இத்தனை பொம்மைகளா! தேவலையே, இதுக்கே இவ்வளவென்று........"

"இந்தப் பச்சைக் குழந்தைக்கோ, இல்லை பின்னாலே வரும் பச்சைக் குழந்தைக்கோ இருக்கட்டுமே. எல்லாவற்றையும் எடுத்து அந்தக் கண்ணாடி பீரோவிலே வை" என்றான்.

மங்களத்திற்கு நாணத்தினால் முகம் சிவந்தது. "போங்கோன்னா, அடி என்பதற்கே ஆம்படையானைக் காணுமாம். அதற்குள்ளே இதற்குத்தான் அவசரம்" என்று சொல்லி விட்டு உள்ளே போய்விட்டாள்.

ராதாகிருஷ்ணனும் சளைக்காமல் வித விதமான பொம்மைகள் வாங்கி பீரோவை நிரப்பினான். இந்தக் கைங்கரியத்தில் மங்களமும் சேர்ந்து கொண்டாள். உலகத்தில் எத்தனை தினுசு பொம்மைகள் உண்டோ அவ்வளவு தினுசுகளும் வாங்கியாய் விட்டது. பொம்மைகள் பீரோவை அலங்கரித்தனவே யொழிய அவைகளை வைத்துக் கொண்டு விளையாடும் ஆசாமி மாத்திரம் வரும் வழியாய்க் காணோம். மங்களமும் கொஞ்ச நாட்கள் வரை 'செலுலாயிட்' பொம்மைகளுக்கு பலமாதிரி உடையுடுத்தி அழகு பார்த்



# விமலாவுக்கு விமோசனம்

தொட்டியில் போட்டுக் காக்கிகளின் மேல் அறைந்தாலும் அழுக்கும் அகலாது துணிதான் கிழிந்து போகிறதே என்ற கவலை இனி விமலாவுக்குக் கிடையாது.

சுத்தத்திற்கும், தூய்மைக்கும் ஏற்றது "காவேரி பார்" சோப் என்று ஆயிரக் கணக்கான பெண்மணிகள் அறிந்த ரகசியத்தை அவளும் தெரிந்து கொண்டு விட்டாள்.

சுத்தத்திற்கும் தூய்மைக்கும் ஏற்றது




மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் தயாரிப்பு

மானேஜிங் ஏஜெண்டுகள் : சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், திருச்சினாப்பள்ளி

ஸ்ரீ அஜிட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் லிமிடெட்.,

120, அரமனைக்காரத் தெரு, ஜி. டி. சென்னை. திருச்சினாப்பள்ளி. மேட்டூர் அணை.

பெங்களூர். பெஜவாடா, கள்ளிக்கோட்டை, கோயமுத்தூர். கடப்பை, குண்டூர், மதுரை, பாலக்காடு, தஞ்சாவூர், திருநெல்வேலி, திருச்சூர், திருவனந்தபுரம், விசாகப்பட்டணம், ஹைதராபாத் (டெக்கான்.)

ஒரு நாள் பாருங்கள்: அப்பா ஆபீஸிலிருந்து வரும்போது ஒரு அழகான காலண்டர் வாங்கிக் கொண்டு வந்தார். அந்தக் காலண்டரில் அழகான யானைப் படம் ஒன்று போட்டிருந்தது. எனக்கு அந்தப் படத்தை நன்றாகப் பார்க்க வேண்டுமென்று ஆசை. நான் அவசரம் அவசரமாகச் சென்று காலெண்டரைப் பிடித்து இழுத்தேன். காலண்டர் மீது இருந்த மைக் கூடு கீழே விழுந்து உடைந்தது. அதற்குப் பிறகு என்ன நடந்தது தெரியுமா? — அதை உங்களுக்குச் சொல்லித்தானா தெரிய வேண்டும்?

ஆனால், அப்பா ஒரு நாள் தம்முடைய மேஜையின்மீது இருந்த 'டேபில் டைம்பீஸை' எடுத்துச் சாவி கொடுக்கும்போது, தவறிக் கீழே விட்டு விட்டார். அது உடைந்து விட்டது. அவரை யாராவது தண்டித்தார்களோ? அதுதான் கிடையாது!

இன்னொரு விஷயம் பாருங்கள். "அவரவர்களுடைய சொந்த வேலைகளை அவரவர்களே செய்து கொள்ளப் பழகிக் கொள்ளவேண்டும்" என்று அப்பா என்னிடம் எத்தனையோ தரம் சொல்லி யிருக்கிறார். ஆனால், அவர் மட்டும் அப்படி ஏதாவது பழகிக் கொண்டிருக்கிறாரோ என்றால், அதுதான் கிடையாது. அவருடைய சொந்த வேலைகளை அம்மா செய்வது போக, பாக்கியை நான் செய்ய வேண்டும். பற்பசையும் 'பிரஷ்'ஷும் கொண்டு வந்து வைப்பது, 'டவல்' கொண்டு வந்து கொடுப்பது; வண்ணானிடமிருந்து துணி வாங்கி வருவது — எல்லாம் நான்தான் செய்ய வேண்டும்.

என் ஆத்திரம் தீர அப்பா மலரில் எழுதிவிட்டேன். ஆனால் நான்தான் இதை எழுதினேன் என்று அப்பாவுக்கு எப்படித் தெரியும்? ஊரில் நான் ஒருவன்தானா அம்பி?






# அப்பா மலர்

அம்பி



இந்த அப்பா மலரைப் படித்தால் நீங்கள் ரொம்ப முன்னுக்கு வந்து விடலாம். இதைப் படித்த பிறகு, நீங்கள் உங்களுடைய அப்பாக்களை அடிக்கடி ஏதாவது குறுக்குக் கேள்விகள் கேட்டுக் கொண்டிருக்கலாம். அவர்களும் அவற்றைக் கேட்டுச் சந்தோஷப்பட்டு உங்களுக்குக் கொடுப்பதை நீங்களும் பேஷாக வாங்கிக் கொள்ளலாம்.

நான் மட்டும் சூரியன் உதயமாவதற்கு முன்னமேயே எழுந்து, எதையாவது எடுத்து வைத்துக் கொண்டு படிக்க வேண்டும். அப்பா நினைத்தால் எட்டு மணி வரை வேண்டுமானாலும் தூங்கிக் கொண்டிருக்கலாம். அவர் எழுந்திருப்பதற்குள், அம்மா ஏற்கெனவே போட்டு வைத்திருந்த காப்பி ஆறிவிடும். அதைக் குடிக்கும் போது அப்பா அம்மாவுடன்



சண்டை பிடிப்பார். அப்பொழுது தாத்தா, "என்னடா, இந்நேரம் தூங்கி எழுந்து விட்டு இப்பொழுது எடுத்ததற்கெல்லாம் 'சள், சள்' ளென்று விழுந்து கொண்டிருக்கிறாயே?" என்று கேட்பார்.

"உன்னைப் போல் பகலெல்லாம் ராமாயண பாராயணம் செய்து கொண்டிருந்தால், ராத்திரி முழுதும் விழித்துக் கொண்டு கூட இருக்கலாம்!" என்று அவர் மேல் எரிந்து விழுவார் அப்பா.

அவர் தம்முடைய அப்பாவை அப்படிக் கோபித்துக் கொள்வதைப் போல், நாம் நம்முடைய அப்பாக்களைக் கோபித்துக் கொள்ள முடிகிறதா?



# காலக்ஷேபம்

## நெருங்கிப் பழகவில்லை !

"நீதான் இந்தச் சிங்கத்தினிடம் அதிகமாகப் பழகுபவனா?"

"இல்லீங்க, அவரு வேறே. நான் இந்தச் சிங்கத்துக்கு ஆகாரம் வைத்துக் குளிப்பாட்டுபவனுங்க." —சங்கர்.

●

## பெரிய சோம்பேறி !

சோம்பேறி:—உங்க கடையில் உரிச்ச வாழைப்பழம் கிடைக்குமா?

கடைக்காரன் (அவனை விட பெரிய சோம்பேறி):—அதோ அந்த மூலையில் வச்சிருக்குது பார்! ரெண்டு பழம் எடுத்துக்கிட்டு அரையணாவை என் 'கல்லா' பெட்டியிலே போட்டு விட்டுப் போ! —ஏ. கே. பட்டுசாமி.

●

## கஷ்டத்தின்மேல் கஷ்டம் !

ஒரு பாட்டுக் கச்சேரியின் இடையில் இரண்டு ஸ்திரீகள் பேச ஆரம்பித்தனர். அதில் ஒருத்தி ஒரு மூலையில் உட்கார்ந்து இருந்த ஒருவரை மற்றவளுக்குக் காட்டி "அதோ ஒருவர் கருப்பா, கண்ணாடி போட்டுண்டு இருக்காரே, பாத்தையோடி?" என்று பரிகாசமாய்க் கேட்டாள்.

இரண்டாவது ஸ்திரீ (கொஞ்சம் தயக்கத்துடன்):—அதுவா, அது என் தமையன்னாடி?

முதல் ஸ்திரீ (தான் தப்பித்துக் கொள்ளுவதற்காக):—கன்னா இருக்கடி, நான் அவரைச் சொல்லலே. அவருக்குப் பின்னாடி வெள்ளக் கடுக்கன் போட்டுண்டு, மூக்கு சப்பையா ஒதடு தூக்கிண்டு இருக்காரே, அவரைன்னா நான் சொன்னது?

இரண்டாவது ஸ்திரீ (முகத்தில் அசடு வழிய):— அது என் அகமுடையான்னா. —வி. லக்ஷ்மணன்.

## வராத காலம்

ராகவன் அநேக நாட்கள் பள்ளிக்கூடம் வரவில்லை. அன்றுதான் வந்திருந்தான்.

சரித்திர உபாத்தியாயர்:— அடே, ராகவா! நீ எப்பொழுதிருந்து பள்ளிக்கூடம் வரவில்லை?

ராகவன் (பாட ஞாபகமாக):—அலக்சாண்டர் இந்தியாவின்மீது படை எடுத்ததிலிருந்து ஸார்!

—எஸ். வி. முத்துசாமி.

●

## ரகசியம் !

டாக்டரின் மகன் (டாக்டரிடம்):—அப்பா! வியாதியஸ்தர்கள் எல்லோரையும் 'கஞ்சி குடி,' 'ஒரு வேளை பட்டினி கிட' என்று சொல்லுகிறாயே, ஏன்?

டாக்டர்:—குழந்தை! அது ஒரு ரகசியம். 'பாலைக்குடி,' 'பழத்தைச்



சாப்பிடு' என்று சொன்னால் அவர்கள் அதற்காகப் பணம் செலவழித்து விடுவார்கள். இந்தப் பஞ்சகாலத்தில் எனக்குப் 'பீஸ்' கொடுக்க அப்புறம் அவர்களால் முடியாதல்லவா?

—எஸ். கிருஷ்ணஸ்வாமி.

பொடியேறு திருமேனி
  பொலிந்துதோன் றும்
 பொழில்திகழும் பூவணத்தெம்
  புனிதனார்க் கே.

இந்தத் தெய்விகமான பாடலைப் பாடிக்கொண்டு சிவகாமி அபிநயம் பிடித்தபோது, அங்கிருந்தவர்கள் எல்லாம் தங்களை மறந்தார்கள். தாங்கள் இருக்கு மிடத்தை மறந்தார்கள். அங்கு நடப்பது என்ன வென்பதையும் மறந்தார்கள்.

சற்று முன்னால் நாவுக்கரசரின் ஈடர் பாடியபோது அவர்களுடைய செவிகளில் இனிய தமிழ்ச் சொற்கள் நின்றன. அவர்களுடைய கண்களோ நாவுக்கரசரை நோக்கின. அப்பாடலை அவர் அநுபவித்து உருகுவதைப் பார்த்து அவர்கள் மனமும் கசிந்தன.

சிவகாமி அபிநயம் பிடித்த போதோ, அவர்களுடைய கண்கள் நாவுக்கரசரை நோக்கவில்லை. அல்லது குமார சக்கரவர்த்தியையோ, சிற்ப சக்கரவர்த்தியையோ அவர்கள் காண வில்லை. அந்த மடாலயத்தின் சுவர்களோ, தூண்களோ, அவற்றில் காணப்பட்ட சிற்பங்களோ, சித்திரங்களோ அவர்கள் கண்ணில் படவே யில்லை.

அவர்கள் கண் முன்னால் பாடி ஆடி அபிநயம் பிடித்துக்கொண்டிருந்த சிவகாமியைக் கூட அவர்கள் பார்க்க வில்லை!

பின் அவர்கள் யாரை அல்லது எதைப் பார்த்தார்கள்?

ஆம்; அவர்கள் சாக்ஷாத் சிவ பெருமானையே நேருக்கு நேர் பார்த்தார்கள்!

அவருடைய திருக் கோலத்தைப் பிரத் யட்சமாகப் பார்த்தார்கள்.

அவருடைய கரத்தில் தோன்றிய திரிசூலத்தையும், அவருடைய வனர் சடைமேல் இலங்கும் இளமதியையும் பார்த்தார்கள்.

அவருடைய திருமிடற்றில் கொன்றை மாலையைப் பார்த்தார்கள்; காதிலே வெண் குழையைப் பார்த்தார்கள்.

திருநீறு பொலியும் திருமேனியை முழுதும் பார்த்தார்கள்.

அந்தத் தெய்விகக் காட்சியில் தங்களை மறந்தார்கள்; உலகையே மறந்தார்கள்.

பூவுலகி லிருந்து கைலாசத்துக்கே போய்விட்டார்கள்.

பாட்டும் அபிநயமும் நின்று சிறிது நேரம் ஆயிற்று, எல்லாருக்கும் சுய உணர்வு பிறந்து பூவுலகிற்கு வருவதற்கு.

உணர்வு பிறந்ததும் அனைவருடைய கவனமும் இயல்பாக நாவுக்கரசர்பால் சென்றது. அவருடைய கண்களி லிருந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகி வெண்ணீறு அணிந்த திருமேனியை நனைத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

இத்தனை நேரமும் பாவனைக் கண்ணால் தாங்கள் தரிசித்துக் கொண்டிருந்த எம்பெருமான் இவர்தானோ என்று அவர்களில் பலருக்கு ஐயமுண்டாயிற்று.

சற்று நேரத்துக்கெல்லாம் நாவுக்கரசர் தழதழுத்தகுரலில் "குழந்தாய், சிவகாமி! நீ நன்றா யிருக்கவேணும்; உனக்கு எல்லா சௌபாக்கியங்களும் கிட்ட வேணும். திருக் கயிலையில் வீற்றிருக்கும் எம்பெருமானை நீ இங்கே எங்கள் முன்னாலே பிரத்யட்சமாகத் தோன்றச் செய்து விட்டாய்!" என்றார்.



ஆயனரும் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்ப, "எல்லாம் தங்கள் ஆசீர்வாதம்தான், சுவாமி!" என்று கூறி, சிவகாமியைப் பார்த்து, "இன்னும் ஒரு பாட்டுக்கு அபிநயம் பிடிக்கிறாயா, அம்மா! இது அகத்துறைப் பாடலாக இருக்கட்டுமே!" என்றார்.

நரசிம்மர் தாம் ஏதாவது கூறியவுடன் ஒவ்வொரு தடவையும் சிவகாமியைப் பார்த்ததுபோல் இப்போதும் பார்த்தார். சிவகாமியோ குனிந்த தலை நிமிரவில்லை.

மாமல்லரின் வார்த்தையைக் கேட்ட நாவுக்கரசர், உற்சாகத்துடன், "நல்லது, குமார சக்கரவர்த்தி! நல்லது! நாங்கள் மறந்துதான் போய் விட்டோம்! எல்லாக் கலைகளுக்கும் ஆதாரமானது நடனக்கலைதான். கவிதைக்குக் கூட நடனமே ஆதாரம். தில்லையம்பலத்தில் ஒரு காலைத் தூக்கி ஆடும் பெருமானின் முன்னால் நிற்கும்போது உள்ளமானது பொங்கிக் கவிதை வெள்ளமாய் வருவதுபோல் மற்ற மூர்த்தங்களுக்கு முன்னால் நிற்கும்போது வருவதில்லை!" என்று கூறிவிட்டு, ஆயனரைப் பார்த்து, "சிற்பியாரே! தங்கள் புதல்வியின் நடனத்தை நான் பார்க்க வேண்டாமா? தென்னாட்டுக்கு யாத்திரை சென்றால் திரும்பி எப்போது வருவேனோ தெரியாது. நாடெல்லாம் புகழும் சிவகாமியின் நடனக் கலையைப் பார்க்காமல் போக எனக்கு மனமில்லை. நிருத்தம், நிருத்யம் ஆகியவற்றுக்கு இங்கே வசதியில்லை. ஒரே ஒரு பாடலுக்கு அபிநயம் பிடித்துக் காட்டினாலும் போதும்!" என்றார்.

ஆயனர், "சுவாமி! சிவகாமிக்கு அத்தகைய பாக்கியம் கொடுத்து வைக்க வேண்டுமே?" என்று கூறி, தமக்குப் பின்னாலிருந்த சிவகாமியைத் திரும்பிப் பார்த்தார். அவள் முக மலர்ச்சியின்றித் தலை குனிந்த வண்ணம் இருப்பதைக் கண்டதும் சிறிது அவருக்கு வியப்பு உண்டாயிற்று.

இதை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த மாமல்லர், "ஒருவேளை நான் இருந்தால் சிவகாமி ஆடமாட்டாள். சுவாமி! விடை கொடுங்கள்! நான் போய் வருகிறேன்!" என்று நாவுக்கரசரைப் பார்த்துக் கூறினார்.

இந்த வார்த்தை காதில் விழுந்ததும், சிவகாமி பளிச்சென்று நிமிர்ந்து, நரசிம்மரைப் பார்த்த பார்வையானது அவருடைய நெஞ்சையே ஊடுருவிச் சென்றது.

அதே மூச்சில் சிவகாமி துள்ளி எழுந்து, நடனத்துக்கு ஆயத்தமாக நின்று, "அப்பா! எந்தப் பாடலுக்கு அபிநயம் பிடிக்க வேண்டும்?" என்று கேட்டதானது, அழகிய மான் குட்டி ஒன்று குயிலின் குரல் பெற்று அமுதத் தமிழ் மொழியில் மழலை பேசுவது போல் தொனித்தது.

"நமது சுவாமிகளின் பாடல் ஏதாவது ஒன்றுக்கு. அம்மா! 'பூவணத்துப் புனிதனார்' தான் முதலில் தோன்றட்டுமே!" என்றார் ஆயனர்.

நாவுக்கரசர், கலை அரசர், இளவரசர் ஆகிய மூன்று மன்னர்களின் முன்னிலையில் சிவகாமியின் நடன அரங்கேற்றம் இரண்டாவது முறை ஆரம்பமாயிற்று.

குமார சக்கரவர்த்தி அவ்விடமிருந்து எழுந்திருக்கவில்லை. அவர் எழுந்து செல்வதாகச் சொன்னதைச் சிவகாமியைத் தவிர வேறு யாரும் கவனித்ததாகவும் தெரியவில்லை.

துள்ளி எழுந்து சபை முன்னால் நின்ற சிவகாமியின் சிலை வடிவத் தோற்றமானது எல்லாருடைய கண்களையும் கவனத்தையும் கொள்ளை கொண்டுவிட்டது.

மந்த மாருதத்தில் மிதந்து வரும் தேன் வண்டின் ரீங்காரம் போன்ற குரலில் சிவகாமி பின் வரும் திருத்தாண்டகத்தைப் பாடிக் கொண்டு, அதன் பொருளுக்கேற்ப அங்கங்களின் சைகைகளினாலும், முக பாவத்தினாலும் அபிநயம் பிடிக்கலானாள். தானத்துக்கேற்ப அமைந்திருந்த அப்பாடலில் ஒவ்வொரு வரியிலும், 'தோன்றும்' 'தோன்றும்' என்று வந்தபோது, சிவகாமியின் பாத சரங்கள் 'ஜல்' 'ஜல்' என்று தானத்துக்கு இசைய ஒலித்தன.

வடிவேறு திரிசூலம்
    தோன்றும்தோன்   றும்.
  வளர்சடைமேல் இளமதியம்
    தோன்றும்தோன்   றும்

கடியேறு கமழ்கொன்றைக்
    கண்ணிதோன்   றும்
  காதில்வெண் குழைதோடு
    கலந்துதோன்   றும்

இடியேறு களிற்றுரிவைப்
    போர்வைதோன்   றும்
  எழில்திகழும் திருமுடியும்
    இலங்கித்தோன்   றும்

பிராயத்தை மாமல்லர் எனக்குத் தெரிவித்துக் கொண்டிருந்தார். யுத்தம் முடியும் வரையில் என்னைச் சிஷ்யர்களுடன் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் உள்ள ஸ்தலங்களைத் தரிசித்து வரும்படி சக்கரவர்த்தி யோசனை கூறியிருக்கிறார். எனக்கும் வெகுகாலமாக அந்த ஆசை உண்டு. சக்கரவர்த்தி தீர்க்க திருஷ்டியுடன் கூறியிருக்கும் யோசனை எனக்கு ரொம்பவும் உகந்திருக்கிறது. காஞ்சிக்கோட்டை ஒருவேளை பகைவர்களின் முற்றுகைக்கு ஆளானாலும் ஆகலாமாம். அம்மாதிரி சமயங்களில் என்னைப் போன்ற துறவிகள் இங்கு இல்லாமலிருப்பதே நல்லது. இராஜ்யத்தை நடத்தும் பொறுப்பு ஏற்றவர்கள் அந்தக் காரியத்தை நன்றாகச் செய்ய வேண்டும். என்னைப் போன்ற துறவிகள் இம்மாதிரி சமயங்களில் விலகி யிருப்பதே நல்லது."

இவ்விதம் நாவுக்கரசர் கூறி வந்த போது, நரசிம்மர் சிறிது மனக் கிளர்ச்சியுடன், "அடிகளே! தாங்கள் இப்போது கூறிய அபிப்பிராயத்தைச் சமண முனிவர்களும் புத்த பிக்ஷுக்களும் ஒப்புக் கொண்டு நடந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அவர்கள் இராஜ்ய காரியங்களில் தலையிடாமல், மோட்ச சாம்ராஜ்யத்துக்கு வழி தேடுவதில் மட்டும் ஈடுபட்டிருந்தால், ஒரு வேளை இந்த யுத்தமே வந்திராது" என்றார்.

புத்த பிக்ஷு என்ற வார்த்தையைக் கேட்டதும் ஆயனருக்குச் சுருக்கென்றது. அவர் பேச்சை மாற்ற விரும்பி, "அடிகளே! ஒரு விஷயம் தெரிவிக்க மறந்து விட்டேன். தங்களுடைய மடாலயத்தில் சேர்ந்து தமிழ் கற்பதற்காக ஒரு பிள்ளை சோழ நாட்டில் திருச்செங்காட்டாங் குடியிலிருந்து வந்தான். திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து தங்களுக்கும் எனக்கும் அவன் ஓலை கொண்டு வந்திருந்தான்..." என்பதற்குள், வாகீசர், "ஆம்; அதுவும் கேள்விப்பட்டேன். குமார சக்கரவர்த்தி தான் சொன்னார். அந்தப் பிள்ளையை எங்கேயோ வெளியூருக்கு அனுப்பியிருக்கிறீர்களாமே?" என்றார்.

"அவன் வந்த சமயம் தாங்கள் இல்லாதபடியால் என்னிடம் வந்தான். சித்திரக்கலை சம்பந்தமான ஒரு மகா இரகசியத்தை அறிந்து வருவதற்காக வடக்கே ஸ்ரீபர்வதத்துக்கு அனுப்பியிருக்கிறேன்...."

"அவ்வளவு தூரமா அனுப்பியிருக்கிறீர்கள்? அங்கேயெல்லாம் யுத்தம் நடக்கும் இடங்களாயிற்றே? எதிரி சைன்யங்களின் சஞ்சாரம் அதிகமாயிருக்குமே? சிறுபிள்ளை யென்று சொன்னீர்களே?" என்று நாவுக்கரசர் சிறிது கவலையுடன் கேட்டார்.

"சிறுபிள்ளையாயிருந்தாலும் மகா வீரன், சுவாமி!" என்று ஆயனர் கூறி, அரங்கேற்றத்தன்று மதயானை மீது வேல் எறிந்து தங்களை அவன் காப்பாற்றியதை விவரித்தார்.

கடைசியாக, "பரஞ்சோதி திரும்பி வந்ததும் உடனே தங்களிடம் அனுப்பி விடுகிறேன், சுவாமி!" என்றார்.

"வேண்டாம், வேண்டாம்! அவன் திரும்பி வரும்போது நான் எங்கே இருப்பேனோ, தெரியாது. எப்போது அவன் உங்கள் தொண்டில் ஈடுபட்டானோ, உங்களுடைய சீடனாகவே இருக்கட்டும். சிற்பக் கலையை அவனுக்கு நன்றாகக் கற்றுக் கொடுங்கள். சிற்பக்கலை பயிலும் பேறு இலேசில் கிடைக்கக்கூடியதா? என்றும் அழிவில்லாத ஈசனுக்கு என்று மழியாத கற்கோயில்களை அமைக்கும் கலையைக் காட்டிலும் சிறந்த கலை உலகில் வேறென்ன உண்டு......?"

இப்படி நாவுக்கரசர் சிற்பக் கலையைப் பாராட்டிப் பேசி வருகையில், ஆயனர் குறுக்கிட்டு, "அடிகளே! சிற்பக் கலையைக் காட்டிலும் சிறந்த கலை வேறொன்று இருக்கிறது. எங்களுடைய கற்கோயில்கள் எல்லாம் சிதைந்து உருத் தெரியாமல் அழிந்து போனாலும் போகும். ஆனால் தங்களுடைய கவிதைக் கோயில்களுக்கு ஒரு நாளும் அழிவில்லை. கற்பகோடி காலம் அவை நிலை பெற்றிருக்கும்" என்றார்.

அப்போது, குமார சக்கரவர்த்தி, "அழகுதான்! சற்று முன்னால் பேசி முடிவு செய்ததை இரண்டு பேரும் மறந்து விட்டீர்களே? எல்லாக் கலைகளுக்கும் ஆதாரம் நடனக்கலை என்று சொன்னது என்ன ஆயிற்று?" என்று சொல்லவே, அங்கிருந்த எல்லாருடைய முகத்திலும் புன்னகை பூத்தது.

சேடர் உடனே பின்வரும் பாடலைப் பாடினார் :—

''செல்வியைப் பாகங் கொண்டார்
சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணி யோடு
மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியிற் கரை யிலாத
காஞ்சிமா நகர்தன் னுள்ளார்
எல்லியம் விளங்க நின்றார்
இலங்குமேற் றளியனாரே!''

மேற்கண்ட பாடலைச் சேடர் இனிய குரலில் உருக்கமாகப் பாடி வந்த போது நாவுக்கரசர் பெருமானின் கண்களில் நீர் ததும்பி நின்றது. அவருடைய நோக்கமானது அங்குள்ள யார் மீதும் செல்லாமல், அக முகமாயிற்று. திருமேற்றளிக் கோயிலில் மல்லிகையும் கொன்றை மலரும் சூடிச் சூரியனைப்போல் ஜோதிமயமாக விளங்கிய சிவபெருமானை மீண்டும் அகக் கண்ணால் அவர் நேருக்கு நேரே தரிசித்துப் பரவச மடைந்தவராகத் தோன்றினார். அந்த மகா புருஷருடைய பக்தி பரவசக் காட்சியை மற்றவர்கள் பார்த்துப் பரவச மடைந்திருந்தார்கள்.

பாட்டு முடிந்து சிறிது நேரம் வரையில் அங்கு மௌனம் குடிகொண்டிருந்தது. பின்னர், நாவுக்கரசர் பரவச நிலை நீங்கி அங்கிருந்தவர்களைப் பார்த்தார். உடனே ஆயனர், ''நாவுக்கரசே! நமது குமார சக்கரவர்த்தியின் பெயரால் விளங்கும் துறைமுகப் பட்டினத்தில் ஒரு முக்கியமான திருப்பணியைத் துரிதமாகச் செய்து முடிக்கும்படி சக்கரவர்த்தி எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறார். ஆனாலும் திருமேற்றளியில் மடாலயத் திருப்பணியையும் நான் மேற்பார்வை செய்து கொள்கிறேன்; மாமல்லர் சம்மதம் கொடுத்தால்'' என்று கூறி, குமார சக்கரவர்த்தியை நோக்கினார்.

மாமல்லர் மறுமொழி கூறுவதற்குள், நாவுக்கரசர் சொல்வார் :—

''அதற்கு இப்போது அவசியமே இல்லை, சிற்பியாரே! தாங்கள் வரும்போதுதான் சக்கரவர்த்தியின் அபிப்



குக் கொண்டுபோக வேண்டுமென்று விரும்பினேன். இவ்விடம் நகரின் மத்தியில் இருப்பதால் கல்வி பயிலும் மாணாக்கர்களுக்கு உகந்ததாயில்லை. ஆனால் திருமேற்றளியில் அமைதி குடி கொண்டிருக்கிறது. நேற்றுக் கூடத் திருமேற்றளி இறைவன் சந்நிதிக்குப் போய்த் தரிசித்துவிட்டு வந்தேன். கோயிலைச் சுற்றியுள்ள நந்தவனத்தில் மல்லிகை மலர்களும், கொன்றை மலர்களும் பூத்துக் குலுங்குகின்றன. சந்தடி கூச்சல் ஒன்றும் இடையாது. அடியார்கள் இறைவனைத் துதிப்பதற்கும் மாணாக்கர்கள் தமிழ் பயில்வதற்கும் தக்க இடம் அதுதான்.''

"பெருமானே! திருமேற்றளி இறைவன் மீது பாடல் ஏதாவது பாடப்பெற்றதா?'' என்று ஆயனர் கேட்க, நாவுக்கரசர் தமது சீடர்களில் ஒருவரைப் பார்த்தார். அந்தச்



நாவுக்கரசர் எழுந்த போது அவருடன் எழுந்திருந்த சீடர்கள் எல்லாரும், "திருநாவுக்கரசு அடிகள் வாழ்க! வாகீசப் பெருந்தகையார் வாழ்க! சிற்ப மகா சக்கரவர்த்தி ஆயனப் பெருமான் வாழ்க!" என்று கோஷித்தார்கள்.

நாவுக்கரசரும் ஆயனரும் அமர்ந்த பிறகு, மற்றவர்களும் அவரவர்களுடைய இடத்தில் உட்கார்ந்தார்கள்.

இவ்வளவிலும் இடம் விட்டு எழுந்திராமல் இருந்தவர் குமார சக்கரவர்த்தி ஒருவர்தான்.

ஆயனர் உட்காருகிற சமயத்தில் அங்கு மாமல்லர் வீற்றிருப்பதைப் பார்த்தார். இருவரும் புன்னகையினால் முகமன் கூறிக் கொண்டார்கள்.

எல்லாரும் உட்கார்ந்த பிறகும் சிவகாமி மட்டும் ஆயனருக்குப் பின்னால் தலை குனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அப்போதுதான் அவளைப் பார்த்த நாவுக்கரசர், "ஆஹா! இது யார், ஆயனரே? தங்கள் குமாரி சிவகாமியா, என்ன?" என்று கேட்க, ஆயனர், "ஆம், அடிகளே! தங்களைத் தரிசிக்கப் போகிறேன் என்று சொன்னபோது சிவகாமி தானும் வருகிறேன் என்றாள்; அழைத்து வந்தேன்" என்றார்.

"மிக்க சந்தோஷம்; உங்கள் குமாரியைப் பார்க்க வேண்டுமென்று நானும் ஆவலாயிருந்தேன், ஆயனரே! நடனக் கலையில் அவள் அடைந்திருக்கும் அபூர்வ தேர்ச்சியைப் பற்றிக் கேள்விப்பட்டேன். சமீபத்தில் சக்கரவர்த்தியின் முன்னிலையில் அரங்கேற்றம் நடந்ததாமே? நான்தான் அச்சமயம் இல்லாமற் போய்விட்டேன்" என்று நாவுக்கரசர் கூறினார்.

"எனக்கும் அது மிக்க வருத்தமாயிருந்தது, சுவாமி! அன்று சிவகாமியின் நடனத்தைப் பார்த்து விட்டு ருத்ராச்சாரியார் பிரமித்துப் போய்விட்டார். சிற்பம், சித்திரம், சங்கீதம் ஆகிய கலைகளுக்கெல்லாம் நடனக் கலைதான் ஆதாரம் என்று நான் அவரிடம் அடிக்கடி வாதாடியதுண்டு. அன்றைக்குத்தான் அதை அவர் ஒத்துக் கொண்டார். 'சிவகாமியின் நடனத்தைப் பார்த்த பிறகு சங்கீதக் கலையில் நான் கற்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறது என்று தெரிந்துகொண்டேன்!' என்று சபை நடுவில் வாய்விட்டுச் சொன்னார்."

இவ்விதம் ஆயனர் கூறியபோது அவருடைய குரலிலே பெருமை தொனித்தது.

அப்போது வாகீசர், "ஆயனரே! சிற்பம், சித்திரம், சங்கீதம் ஆகிய கலைகளுக்கு மட்டுந்தானா நடனக் கலை ஆதாரம்? சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய தெய்வக் கலைகளுக்கே ஆதாரமாயிருப்பது நடனந்தான்! அண்டபகிரண்டங்களையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் பெருமான் தில்லைச் சிற்சபையில் வந்து ஆனந்த நடனம் பயில்கிறார் அல்லவா?" என்றார்.

இதுவரை மௌனமாக இருந்த குமார சக்கரவர்த்தி, "நடராஜப் பெருமானின் ஆனந்தக் கூத்தைப் பாடும் தங்களுடைய பாடல் ஒன்றுக்கு அரங்கேற்றத்தன்று சிவகாமி அபிநயம் பிடித்தாள்; அற்புதமாயிருந்தது!" என்றார்.

"ஆம், சுவாமி! தங்களுடைய திருப்பாடல்களில் மூன்று பாடல்களுக்குச் சிவகாமி அபிநயம் பிடிப்பதாயிருந்தாள். ஆனால் ஒரு பாடலுக்குத்தான் அபிநயம் பிடிக்க முடிந்தது. அரங்கேற்றம் நடுவில் நின்ற செய்தியும் கேட்டிருப்பீர்களே?" என்று ஆயனர் கூறியபோது, அதனால் ஏற்பட்ட வருத்தம் இன்னும் அவருக்குத் தீரவில்லையென்று தோன்றியது.

"கேள்விப்பட்டேன், ஆயனரே! அரங்கேற்றம் நடந்து கொண்டிருந்த போதே யுத்தச் செய்தி வந்து, சக்கரவர்த்தி எழுந்து போகும்படி ஆகிவிட்டதென்று கேள்விப் பட்டேன். யுத்தத்தினால் சிவகாமியின் அரங்கேற்றம் மட்டுந்தானா தடைப்பட்டது? இன்னும் எத்தனையோ காரியங்கள் தடைப்படும் போலிருக்கிறது. உம்மை நான் அழைத்த காரியங்கூட அப்படித்தான்" என்று வாகீசப் பெருமான் கூறினார்.

"சுவாமி! என்ன காரியமாக என்னை வரச் சொல்லிப் பணித்தீர்கள்?" என்று ஆயனர் கேட்டார்.

"நமது திருமடத்தை இந்த ஏகாம்பரர் சந்நிதியிலிருந்து திருமேற்றளிக்

இவ்விதம் அந்நாளில் நாவுக்கரசரின் மகிமை எங்கெங்கும் பரந்து பரவியிருந்தது. சாதாரணமாக, அப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இடங்களில் ஜனங்கள் அவருடைய தேஜோமயமான திருமுகத்தைப் பார்த்துக் கொண்டும், அவருடைய திருவாக்கிலிருந்து எப்போது என்ன அமுத வார்த்தை வருமோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டும் இருப்பார்கள்.

அங்ஙனமிருக்க, இன்று அவருடைய மடாலயத்தில் அவரிடம் பக்தி பூண்டு தொண்டு செய்யும் சீடர்கள் கூட, "ஆயனர் வருகிறார்!" என்ற சொல்லைக் கேட்டதும் ஒருமுகமாக வாசற் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள் என்றால், அதிலிருந்து மக்களின் உள்ளத்தில் ஆயனர் எப்பேர்ப்பட்ட இடம் பெற்றிருந்தார் என்று ஊகித்து அறியலாம்.

அந்த நாளில் தென்னாட்டில் புகழ் வாய்ந்திருந்த மகா சிற்பிகளுக்குள்ளே ஆயனர் தலை சிறந்த சிற்ப சக்கரவர்த்தியாகக் கருதப்பட்டது மட்டுமல்ல; அவருடைய மகள் சிவகாமியினாலும் அவரது புகழ் பெருகியிருந்தது. ஒப்பற்ற சௌந்தரியவதி சிவகாமி என்றும், நடனக் கலைக்கே சிறப்பளிக்கப் பிறந்தவள் என்றும், அவளுடைய நாட்டியத் தோற்றங்களைப் பார்த்தே ஆயனர் ஜீவகளை பொருந்திய தத்ரூபமான நடன சிற்ப வடிவங்களை அமைக்கிறார் என்றும் எங்கெங்கும் ஜனங்கள் பேசிக் கொண்டார்கள்.

அப்பேர்ப்பட்ட ஆயனர் வருகிறார் என்றதும், அங்கிருந்தவர்கள் எல்லாருக்குமே ஒருவிதப் பரபரப்பு உண்டானதில் வியப்பில்லை யல்லவா?

ஆனால், எல்லாரையும் விட நாவுக்கரசரின் அருகில் வீற்றிருந்த குமார சக்கரவர்த்தியின் உள்ளத்திலேதான் அளவிட முடியாத எழுச்சி உண்டாயிற்று. "ஆயனர் வருவார்" என்று முதலில் கேட்டதும், அவரிடம் ஏதாவது ஒரு சங்கேதமான முறையில் சிவகாமிக்குச் செய்தி சொல்லி அனுப்பலாமென்று மாமல்லர் எண்ணினார். அதற்காகத்தான் இத்தனை நேரம் அவர் காத்திருந்தார். ஆனால், "இதோ ஆயனர் வருகிறார்!" என்ற வார்த்தைகளைக் கேட்டதும், "ஒருவேளை அவருடன் சிவகாமியும் வருவாளோ?" என்ற எண்ணம் அவர் மனத்தில் தோன்றி, விவரிக்க வொண்ணாத எழுச்சியை உண்டாக்கிற்று. அடுத்த கணத்தில், "அவள் எதற்காக இங்கு வருகிறாள்?" என்ற எண்ணம் சொல்ல முடியாத மனச் சோர்வை அவருக்கு உண்டாக்கிற்று. இவ்விதம் அவர் மாறி மாறிக் கிளர்ச்சியும் சோர்வும் அடைவது அதிக நேரம் நீடித்திராதபடி ஆயனர் வாசற்படியண்டை வந்துவிட்டார்! ஆஹா! அது என்ன 'ஜல் ஜல்' சத்தம்? பாதசரத்தின் ஒலிபோல் இருக்கிறதே! அதோ ஆயனருக்குப் பின்னால் வரும் பெண் உருவம் யாருடையது? சந்தேகமென்ன? சிவகாமியேதான்!

குமார சக்கரவர்த்தியின் கண்கள் காணாததைக் கண்டதுபோல் சிவகாமியின் முகத்தை நோக்கின. மண்டபத்தின் வாசற்படிக் கருகில் வந்தபோது சிவகாமியின் கண்களும் முதன் முதலில் மாமல்லரின் ஆவல் ததும்பிய கண்களைத்தான் சந்தித்தன. வாடியிருந்த சிவகாமியின் முகத்தில் ஒரு கணம் புது மலர்ச்சி காணப்பட்டது. ஆனால் ஒரு கண நேரந்தான்; அடுத்த கணத்தில் அந்தச் செந்தாமரை முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தது. தலைகுனிந்து பூமியை நோக்கிய வண்ணம் சிவகாமி தன் தந்தையைப் பின் தொடர்ந்து அந்த மண்டபத்துக்குள்ளே நுழைந்தாள்.

மேற்கூறிய நயன பாஷை நாடகத்தை வேறு யாரும் கவனியாத வண்ணம் மண்டபத்துக்குள் அப்போது பெருங் கலகலப்பு உண்டாகியிருந்தது.

பணிவுக்குப் பெயர் போன நாவுக்கரசர் பெருமான், ஆயனர் மண்டபத்துக்குள்ளே நுழைந்ததும் தாமும் ஆசனத்தை விட்டு எழுந்து நாலு அடி நடந்து எதிர்கொண்டு, "வரவேணும்! சிற்ப சக்கரவர்த்தியே! வரவேணும்!" என்று உபசரித்து அழைத்தார். ஆயனர் இதைக் கண்டதும் விரைந்து முன்னால் வந்து, "அபசாரம்! அபசாரம்!" என்று கூறிக் கொண்டே திருநாவுக்கரசரின் திருப்பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.




முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## இரண்டாவது அரங்கேற்றம்

திருநாவுக்கரசு அடிகளுக்கு அப்போது ஏறக்குறைய ஐம்பத்தைந்து பிராயமிருக்கலாம். அவர் சமண சமயத்தை விட்டுச் சைவ சமயத்தைத் தழுவிய மகத்தான சம்பவம் நிகழ்ந்து பத்து ஆண்டுகள் ஆகியிருந்தன.

அவருடைய பொன் வண்ணத் திருமேனி முழுதும் தூய வெண்ணீறு பூசியிருந்தது. அவருடைய கழுத்தையும் மார்பையும் ருத்திராட்ச கண்டிகைகளும் தாழ்வடங்களும் அலங்கரித்தன. சிரசிலும் கரங்களிலும் அவ்வாறே ருத்திராட்சங்கள் பொலிந்தன. காதுகளில் ருத்திராட்ச குண்டலங்கள் இலங்கின. அவருடைய இடையில் தூய வெண் துகில் துலங்கிற்று. அவருடைய திரு முகத்தில் ஞான ஒளி வீசிற்று. இறைவனை நினைந்து இடையறாது கண்ணீர் விட்ட அவருடைய கண்களில் பேரருள் ததும்பிற்று.

கோயில் பிராகாரங்களில் புல் செதுக்குவதற்கான உழவாரப் படை என்னும் கருவி அவருடைய திருத்தோளில் சாத்தப்பட்டு விளங்கிற்று.

திருநாவுக்கரசர் காஞ்சியில் ஸ்தாபித்திருந்த சைவத் திருமடத்துக்கு அதிபதியாயிருந்ததோடு அவ்வப்போது ஸ்தல யாத்திரை சென்று திரும்புவது வழக்கம். தொண்டை நாட்டிலும், நடுநாட்டிலும், சோழ நாட்டிலும் உள்ள பல சிவ ஸ்தலங்களுக்கு அவர் சென்று சிவானந்தமும் தமிழின்பமும் ததும்பும் தெய்வத் திருப்பதிகங்களைப் பாடியிருந்தார். சென்ற இடங்களிலெல்லாம் ஜனங்கள் அவரைச் சிறப்பாக வரவேற்றார்கள். சிவிகையில் ஏற்றி ஊர்வலம் விட்டார்கள். அவர் சென்ற ஒவ்வொரு ஸ்தலத்திலும் கோயில் பிராகாரங்களில் முளைத்திருக்கும் புல்லை அவர் தாமே உழவாரப் படை என்னும் கருவியினால் செதுக்கிச் சுத்தம் செய்தார். இந்தச் சிவ கைங்கரியத்தை ஆயிரக்கணக்கான மக்கள் பக்தி சேர்ந்த அதிசயத்துடன் பார்த்தார்கள். அது முதல் தங்கள் ஊர்க் கோயில்களைப் புதுப்பித்துச் சுத்தமாக வைத்திருக்கத் தீர்மானித்தார்கள்.

வாகீசப் பெருமானுடைய திருவாக்கினால் தங்கள் தங்கள் ஊரிலுள்ள கோயிலுக்கு மகிமை உண்டாக வேண்டுமென்று ஜனங்கள் விரும்பினார்கள். "எங்கள் ஊர்க் கோயிலைப் பற்றியும் பதிகம் பாடியருள வேண்டும்" என்று அவரிடம் வேண்டிக் கொண்டார்கள்.

ஆனால் அவர்கள் வேண்டுதலுக்குக் காத்திராமலே நாவுக்கரசர் தாம் தரிசித்த ஸ்தலங்களில் உள்ள மூர்த்திகளைப் பற்றி இசையோடு தமிழ் பாடி அருளினார். அவ்விதம் பாடிய பாடல்களைத் தம் சீடர்களுக்கும் கற்பித்தார். அந்தந்தப் பதிகங்களை அந்தந்த ஊர்க்காரர்கள் ஓலைச் சுவடிகளில் எழுதிக் கொண்டு, பெறுதற்கரிய பேறு அடைந்ததாக எண்ணிமகிழ்ந்தார்கள்.




தாய்மார்களும், தந்தையர்களும் விரும்புவது

# பெரீஸ் பிஸ்கோத்துகள்

## ஏன் ?

தங்கள் குழந்தைகளை போஷித்து வளர்க்கச் செய்யும் சிறந்த ஆகாரம் என்று அறிந்திருக்கிறார்களென்பதே!

PERRY & COMPANY, BISCUITS MANUFACTURERS, USILAMPATTI

இரவு தூக்க மில்லாதபடியாதலால், கவலையினாலும் பயத்தினாலும், பாண்டவர்களும் முக்கியமாகக் குந்தி தேவியும் வேகமாக நடந்து போக முடியாமல் களைத்திருந்ததைப் பார்த்து வாயு புத்திரனான பீமசேனன் தாயாரைத் தோளின் மேலும் இடுப்பில் நகுல சகதேவர்களையும் தூக்கிக்கொண்டு யுதிஷ்டிரனையும் அருச்சுனனையும் இரண்டு கைகளால் பிடித்துக்கொண்டு யானையைப்போல் காட்டில் செடிகளையும் புதர்களையும் விலக்கி வழி செய்துகொண்டு சென்றான். கங்கைக்கு வந்ததும் அங்கே விதுரன் அனுப்பி யிருந்த ஓடம் தயாராக இருந்தது. ஓடக்காரன் ரகசியம் தெரிந்த நண்பன் என்பதைச் சோதித்துத் தெரிந்து கொண்டு இரவிலேயே கங்கையையும் தாண்டிச் சென்றார்கள். பிறகு காட்டில் ஒரு பகலெல்லாம் வேகமாக நடந்தார்கள். மாலையில் இருட்டு மூடவும் பயங்கரமான மிருகங்களின் சத்தங்கள் உண்டாக ஆரம்பித்தது.

தாகத்தினாலும் களைப்பினாலும் நித்திரையினாலும் பீடிக்கப்பட்டு ஒரு அடி வைக்கக்கூடச் சக்தியில்லாமல் கீழே உட்கார்ந்தார்கள். "திருதராஷ்டிரப் புத்திரர்கள் என்னைத் தூக்கிக் கொண்டு போகட்டும்; நான் இங்கேயே இருப்பேன்" என்று குந்தி படுத்து நினைவு தப்பிப் போனாள். பீமன் மனம் கொதிப்புற்றது. பயங்கரமான காட்டில் இருட்டில் புகுந்து எங்கிருந்தோ தன்னுடைய மேலாடையை தண்ணீரில் நனைத்தும், தாமரை இலைகளினால் தொன்னைகள் செய்தும் தண்ணீர் கொண்டு வந்து குந்தி தேவிக்கும் சகோதரர்களுக்கும் கொடுத்தான். பிறகு எல்லாரும் மெய்மறந்து அங்கேயே தூங்கி விட்டார்கள். பீமன் மட்டும் சிந்தனை செய்து கொண்டு விழித்திருந்தான். "இந்தக் காட்டில் செடிகளும் கொடிகளும் ஒன்றையொன்று காப்பாற்றிக் கொண்டு பிழைக்க வில்லையா? ஏன் இந்தத் துராத்மா திருதராஷ்டிரனும் துரியோதனனும் இவ்வாறு எங்களைப் பகைக்கிறார்கள்?" என்று நினைத்து வருந்தினான்.

* * *

அநேக ஆபத்துக்களைத் தாண்டிக் கொண்டு பாண்டவர்கள் சென்றனர். சில இடங்களில் தாயாரைத் தூக்கிக் கொண்டு விரைந்து சென்றனர். சில இடங்களில் களைத்து நின்றனர். சில இடங்களில் ஒருவரோடு ஒருவர் போட்டி போட்டுக்கொண்டு நடந்தனர்.

வழியில் வியாச பகவானைக் கண்டார்கள். எல்லாரும் நமஸ்கரித்து அவரிடம் தைரியத்தையும் உபதேசத்தையும் பெற்றார்கள். தங்களுக்கு நேர்ந்த துக்கத்தைச் சொல்லிக்கொண்ட குந்திக்கு வியாசர், "எந்த மனிதனும் தருமத்தை மாத்திரமே செய்ய முடியாது. எந்த பாபியும் பாபத்தையே செய்து கொண்டிருக்கவும் முடியாது. புண்ணிய பாபங்கள் இரண்டையும் செய்யாதவன் உலகத்தில் எவனுமில்லை. செய்த காரியங்களின் பலனை எல்லாரும் அடைவார்கள். விசனத்தில் மனத்தைச் செலுத்தாதே" என்று சொல்லிச் சமாதானப் படுத்தினார்.

பிறகு வியாசர் சொல்லின்படி பிராமண பிரமசாரிகளாக வேஷம் பூண்டு ஏகச் சக்கர நகரத்தில் ஒரு பிராமணன் வீட்டில் இருந்துகொண்டு, தினமும் பிராமணர்கள் வீட்டில் அன்னம் பிக்ஷை எடுத்துக் கிடைத்ததைத் தாயாரிடம் கொடுத்துப் பங்கிட்டு எல்லாரும் சாப்பிட்டுக் கொண்டு காலம் கழித்து வந்தார்கள்.




கொண்டு பாண்டவர்கள் அங்கே வாசம் செய்தார்கள். புரோசனனும் இவர்களிடம் எவ்விதச் சந்தேகமும் பழியும் தோன்றாதபடி வீட்டுக்குத் தீ வைக்க வேண்டும் என்ற நல்ல சமயத்திற்காகப் பொறுமையாகவே காத்துக் கொண்டிருந்தான். இவ்வாறு ஒரு வருஷம் கழிந்தது.

**பி**றகு ஒருநாள் இனிச் சமயம் வாய்க்காது என்று புரோசனன் எண்ணினான். புத்திசாலியான யுதிஷ்டிரனுக்கும் புரோசனனுடைய மனதிலிருந்தது புலப்பட்டது. தன் சகோதரர்களை நோக்கி “இந்த பாபிஷ்டன் நம்மைக் கொல்லும் காலம் வந்தது என்று எண்ணுகிறான். நாம் ஓடித் தப்புவதற்கு இதுதான் சமயம்” என்றான்.

குந்தி தேவி அன்று ஒரு அன்னதானம் செய்வதாக ஏற்பாடு செய்து மாளிகையில் இருந்த பணியாளர்கள் எல்லாரும் நன்றாகச் சாப்பிட்டு இரவில் மயக்க முற்றுத் தூங்கிவிட ஏற்பாடு செய்தாள்.

நடு ஜாமத்தில் பீமன் அந்த மாளிகையின் அநேக பாகங்களில் தீப் பற்ற வைத்து விட்டு, குந்தி தேவியும் பாண்டவ சகோதரர்களும் சுரங்கத்தின் வழியாக இருட்டில் கவனைத் தடவித் தடவி வழி தெரிந்துகொண்டு வெளியேறி விட்டார்கள். தீயானது உடனே வீட்டை நாலு பக்கமும் சுற்றிக் கொண்டது. புரோசனன் இருந்த இடமும் பற்றிக் கொண்டது. ஊரார் எல்லாரும் வந்து சேர்ந்து தீப் பற்றி எரியும் மாளிகையைக் கண்டு “ஹா! ஹா!” என்று கதறினார்கள். “துரியோதனனிகன் குற்றமற்ற பாண்டவர்களை இம்மாதிரி மோசம் செய்து கொன்றார்களே” என்று கௌரவர்களைக் கோபாவேசத்துடன் பலவிதமாகப் பழித்தார்கள். மாளிகை எரிந்து சாம்பலாயிற்று. புரோசனனும் எதிர்பாராதபடி தீக்கு இரையானான். வாரணாவதத்து ஜனங்கள் “பாண்டவர்கள் இருந்த மாளிகை தீக்கு இரையாயிற்று. யாரும் உயிருடன் தப்பவில்லை” என்று ஹஸ்தினாபுரத்துக்குச் சொல்லியனுப்பினார்கள்.

திருதராஷ்டிரன் மிக்க துயரத்தைக் காட்டிக் கொண்டான். “ஆழமான ஒரு மடுவில் நீர் கோடை காலத்தில் அடியில் குளிர்ச்சியாகவும் மேலே உஷ்ணமாகவும் இருப்பதுபோல் அவன் உள்ளத்தில் மகிழ்ச்சியும் துக்கமும் கலந்திருந்தது” என்று கவி வெகு அழகாக வர்ணிக்கிறார்.

திருதராஷ்டிரனும் அவன் மக்களும் ஆபரணங்களைக் களைந்து விட்டு ஒற்றை ஆடை உடுத்திக் கொண்டு கங்கைக்குச் சென்று பாண்டு புத்திரர்களுக்கும் குந்திக்கும் தர்ப்பணம் செய்தார்கள். எல்லாரும் சேர்ந்து பெருங் கூக்குரலிட்டுப் புலம்பினார்கள்.

விதுரன் மட்டும் பிறப்பும் இறப்பும் விதிப்படி நடக்கும் என்ற வேதாந்த உணர்ச்சியோடு துக்கத்தை அதிகமாகக் காட்டிக் கொள்ளவில்லை. ஆனால் அதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவன் பாண்டவர்கள் இறக்கவில்லை, தப்பி யோடிப் பிழைத்திருக்கிறார்கள் என்றே நிச்சயமாக இருந்தான். ஜனங்களோடு ஓரளவு புலம்பினவனாலும் இந்த நேரத்தில் பாண்டவர்கள் எவ்வளவு தூரம் போயிருப்பார்கள், எங்கே இருப்பார்கள் என்று கவலையோடு யோசித்துக் கணக்கிட்டுக் கொண்டே இருந்தான். பீஷ்மர் துக்க சாகரத்தில் மூழ்கினதைக் கண்டு அவருக்கு விதுரன் ரகசியமாக தான் செய்த ஏற்பாடுகளை யெல்லாம் சொல்லிச் சந்தோஷப்படுத்தினான்

# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## பாண்டவர்கள் தப்பியது

பாண்டவர்கள் பெரியோர்கள் அனைவருக்கும் நமஸ்காரம் செய்து, சமமான வயதாயிருந்தவர்களைத் தழுவி விடை பெற்றுக்கொண்டு வாரணாவதம் சென்றார்கள். கூட வந்த நகரத்து ஜனங்கள் திரும்பிப் போனபின் விதுரன் யுதிஷ்டிரனுக்கு மர்மமாக அந்நிய பாஷையில் எச்சரிக்கை செய்தான்:

"ராஜநீதியில் நிபுணனாகிய எதிரியின் யோசனையை அறிந்தவன்தான் ஆபத்தைத் தாண்டுவான். உலோகத்தினால் செய்யப்படாத கூர்மையான ஆயுதமும் உண்டு. அதைத் தடுக்கும் உபாயத்தை எவன் அறிந்து கொள்ளுகிறானோ அவன் பகைவர்களால் கொல்லப்பட மாட்டான். காடுகளை அழிப்பதும் குளிரைப் போக்குவதுமான ஒரு பொருள் வளைக்குள் வாசம் செய்யும் எலியைத் தின்னாது. முள்ளம் பன்றி பூமியைத் தோண்டி காட்டுத் தீயிலிருந்து தப்பித்துக் கொள்ளும். அறிவாளி நட்சத்திரங்களினால் திசையை அறிகிறான்."

இவ்வாறு மறைவாகப் பொருளை ஏற்றி விதுரன், யுக்தியாக பாண்டவர்களுக்குத் துரியோதனனுடைய சதியாலோசனையையும் ஆபத்திலிருந்து தப்பும் வழியையும் ஜனங்களுக்குத் தெரியாத அந்நிய மொழியில் சொன்னான். யுதிஷ்டிரனும் "தெரிந்தது" என்று சொன்னான். பிறகு குந்திதேவி யுதிஷ்டிரனைக் கேட்டு விதுரன் சொன்னதை எல்லாரும் தெரிந்துகொண்டு சந்தோஷமற்று மிகுந்த கவலையுடன் சென்றார்கள்.

வாரணாவதத்து ஜனங்கள் பாண்டவர்கள் தங்கள் நகரத்துக்கு வருகிறார்கள் என்று கேட்டு மிகுந்த மகிழ்ச்சியுடன் எதிர்கொண்டு வரவேற்றார்கள். அவர்களுக்கென்று ஏற்படுத்திய விடுதிகளில் பாண்டவர்கள் சில நாட்கள் இருந்து வந்தார்கள். பிறகு புதிதாகக் கட்டிமுடித்த ஒரு அழகிய மாளிகையில் புரோசனன் பாண்டவர்களை அழைத்துப்போய் இருக்கச் செய்தான். அமங்களமான அந்த மாளிகையின் பெயர் "சிவம்!" விதுரன் சொன்னதை சிந்தையில் வைத்துக் கொண்டு வீட்டையெல்லாம் யுதிஷ்டிரன் கவனித்துப் பார்த்தான். தீக்கு இரையாவதற்கே கட்டியது என்றும் தெரிந்து கொண்டான். பீமனிடம் சொன்னான்:

"ஆபத்தான இடம் என்று நன்றாகத் தெரிந்த போதிலும் நாம் சதியாலோசனையைத் தெரிந்து கொண்டுவிட்டோம் என்பதைப் புரோசனனுக்குக் காட்டாமலிருக்கவேண்டும். சமயம் பார்த்து நாம் வெளியேற வேண்டும். இப்போது சந்தேகத்துக்கு இடம் தரக் கூடாது."

இவ்வாறு தீர்மானித்து அந்த வீட்டிலேயே இருந்தார்கள். இதற்குள் விதுரன் ஒரு சமர்த்தனான சுரங்கக்காரனை அனுப்பினான். அவன் பாண்டவர்களை ஏகாந்தமான ஒரு இடத்தில் சந்தித்து "உம்முடைய நன்மையை உத்தேசித்து விதுரன் யுதிஷ்டிரனிடம் அந்நிய பாஷையில் மறை பொருள் வைத்துச் சொன்னாரே, அதுவே என்னை நீங்கள் நம்புவதற்கு அடையாளம். உங்களுடைய சகாயத்துக்காகச் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்து தரவே வந்திருக்கிறேன்" என்றான்.

அதன்மேல் அந்த சுரங்கக்காரன் புரோசனனுக்குத் தெரியாமல் பல நாட்கள் ரகசியமாக வேலை செய்து, அரக்கு மாளிகைக்குள்ளிருந்து அபாயமில்லாமல் வெளியே மதிலையும் அகழியையும் தாண்டிப் போவதற்குச் சுரங்கம் செய்து முடித்தான்.

புரோசனன் மாளிகையின் வாயிலிலேயே வசித்து வந்தான். பாண்டவர்கள் இரவு முழுதும் ஆயுதபாணிகளாகவே ஜாக்கிரதையாகத் தூக்கமில்லாமல் இருந்து வந்தார்கள். பகலில் வேட்டையாடிக் கொண்டு காடுகளில் திரிந்து வந்தனர். ஆனால், சுற்றுப் பக்கத்துத் தேசத்தையும் பாதைகளையும் நன்றாகத் தெரிந்து கொண்டார்கள். புரோசனனை முற்றிலும் நம்பினவர்களைப் போலவும் சந்தோஷமுள்ளவர்களைப் போலவும் தங்களுடைய கவலையையும் சந்தேகத்தையும் மறைத்துக்

# ஆகாச வெடி

"ருஷ்யாவில் பருத்திச் செடிகள் வர்ணப் பருத்தியாகவே காய்த்துத் தொங்கும்படியாகத் தாவர ஆராய்ச்சி நிபுணர்கள் ஒரு புது முறையைக் கண்டு பிடித்திருக்கிறார்களாம்."

—ஒரு செய்தி.

அதில் என்ன பிரயோஜனம்? பருத்தி புடவையாகவே காய்த்துத் தொங்கும் படியல்லவா கண்டுபிடிக்க வேண்டும்?

* * *

"நேற்றிரவு உட்கார்ந்து கொண்டு "மாஸ்கோ தூது" என்ற சினிமாப் படத்தைப் பார்த்ததின் விளைவாக மகாத்மாஜிக்கு ரத்தம் கொதிப்பு ஏற் பட்டிருக்கிறது." —பம்பாய் செய்தி.

நம்மூரில் சில தமிழ் டாக்கிகளைப் பார்க்கும் போது நம் ரத்தம் கூடக் கொதிப்பதுண்டு.

* * *

"முடிகிற போதெல்லாம் காந்திஜி நூல் நூற்கிறார்." —ஒரு தினசரி.

அப்படி நூற்கும் நூல் அறுபட்டுப் போகும் போது அதை முடிகிற வழக்க மும் அவரிடம் உண்டு.

* * *

"தென்கிழக்கு ஆசியா தளபதி லார்ட் லூயி மவுண்ட் பாட்டன் தமது கண் ஒன்றை ஆபரேஷன் செய்துக் கொண் டார். அவர் கண்ணிலிருந்து ஏதோ 'அன்னிய வஸ்து' எடுக்கப்பட்டது."

—ஒரு செய்தி.

அன்னியர்களை விரட்டுவதிலேயே கண்ணும் கருத்துமா யிருக்கும் மௌண்ட் பாட்டன் கண்ணில் 'அன்னிய வஸ்து' எப்படிப் புகுந்தது என்று கேட்கப் படுகிறது.

* * *

"பம்பாயில் தீவிபத்துக் குள்ளான பிரதேசங்களை காந்திஜி சென்று பார்வை யிட்டார். விபத்துக்கு நேர்ந் பட்டுச் சுமார் ஒரு மாதத்திற்கு மேலா கியும் இன்னும் சில இடங்களில் தீ எரிந்து கொண்டிருந்தது."

—ஒரு செய்தி.

ஒரு மாதமாக அக்னிபகவான் அணை யாமல் இருந்ததற்குக் காந்திஜியைத் தமது கண்ணால் காணலாம் என்ற ஆசையே காரணமா யிருக்கவேண்டும்.



திருநெல்வேலி இரும்பு & பெயின்ட் வியாபாரம் மெஸர்ஸ். S. S. P. சின்னப்ப நாடார் அன் கோ பார்ட்னர் ஸ்ரீ S. ஷண்முக நாடார் புத்திரி சௌ பாக்யவதி லீலாவுக்கும், சிவகாசி ஸ்ரீ R. M. வீரப்ப நாடார் புத்திரன் சிதம்பரம் B. A. (Accountant Collectorate, Cuddalore N. T.) க்கும் திருநெல் வேலியில் 8-6-44ல் வெள்ளிக்கிழமை வெகு சிறப் பாகக் கல்யாணம் நடந்தது. மணமக்களுக்கு ஏராள மான வாழ்த்துக்களும் பரிசுகளும் வந்தன. பல — பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தனர். —

## விவாஹத்திற்கு அழைப்பு

ரெயில்வே மாஜி சீப் கமிஷனர் ஸ்ரீமான் டி. எஸ். சங்கரய்யர், B.A., B.E., C.I.E., அவர்களது குமாரி சௌபாக்யவதி ருக்மிணி அம்மாளுக் கும், கோயம்புத்தூர் கலாசாலை பேரா சிரியர் ஸ்ரீமான் வி. பி. நாராயண அய்யர் எம். ஏ. எல். டி. அவர்களின் குமாரரும், ஜாம்ஷெட்பூர் டாடா கம் பெனியில் என்ஜினியர் வேலை பயில் பவருமான சிரஞ்சீவி பத்மநாபன், B. Sc.க்கும், சென்னை ஜியார்ஜ் டவுன் நெ. 24 நாராயண முதலி தெருவில் 31உ யன்று விவாஹம் சிறப்பாக நடந்தேறும்.

இத்திருமணத்திற்கு வந்திருந்து தம்பதிகளை ஆசீர்வதிக்கும்படி ஸ்ரீ சங்க ரய்யரும், ஸ்ரீமதி சீதாலக்ஷ்மி சங்க ரய்யரும் உறவினர்களையும், நண்பர் களையும் கேட்டுக் கொள்கின்றனர்.



ஸ்ரீமதி சரோஜினிதேவி முன்னே செல்ல, டாக்டர் கில்டரும், டாக்டர் சுசீலா நாயரும் பின் தொடர காந்திஜி ஜுஹுவுக்கு வந்து சேர்கிறார்.

இந்த பலஹீன ஸ்திதியிலும் அவருடைய புகழ் பெற்ற மோகனப் புன்னகை அவரை விட்டகலவில்லை.

காந்திஜி பிரதி தினமும் நடத்தும் பிரார்த்தனையில் திரளான ஜனங்கள் கலந்துகொண்டு பரவசம் அடைகிறார்கள்.

இவ்வளவு பிரிவினைகளையும் விரோதங்களையும் வைத்துக்கொண்டு சும்மா இருக்கிறார்களா?

கிடையாது. ஓயாமல் ஏதாவது சண்டையைக் கிளப்பி விட்டுக்கொண்டிருக்கிறார்கள்.

ஜெர்மனிக்கும் பிரான்ஸுக்கும் தலைமுறை தலைமுறையாகச் சண்டை.

ருஷியாவுக்கும் போலந்துக்கும் ஓயாத சண்டை.

பால்கன் பிரதேசங்களில் எப்போது யாருடன் யார் சண்டை போடுவார்கள் என்று சொல்ல முடியாது.

இரண்டு தேசங்களுக்குள் யுத்தம் நேர்ந்தால், அவர்களுடன் போகிறதா? அதுதான் இல்லை.

அக்கம் பக்கத்திலுள்ள மற்றத் தேசங்களும் யுத்தச் சுழலில் இழுக்கப்படுகின்றன.

சரி, அப்படி ஏற்படும் யுத்தம் ஐரோப்பாவுடன் நின்று தொலைகிறதா? அதுவும் இல்லை. ஐரோப்பாவில் ஏற்படும் யுத்தத் தீயானது உலகம் முழுதும் வியாபித்து விடுகிறது.

நம்முடைய தலைமுறையில் இம்மாதிரி இரண்டு உலக மகா யுத்தங்கள் நேர்ந்திருக்கின்றன.

ஆஸ்திரியா தேசத்து இளவரசனை ஸெர்பியாவில் யாரோ ஒருவன் கொன்றது காரணமாகச் சென்ற உலக மகா யுத்தம் மூண்டது.

போலந்தில் ஜெர்மனி பிரவேசித்ததின் பயனாக இந்த மகா பயங்கர யுத்தம் மூண்டு நடந்து வருகிறது.

ஐரோப்பாவின் அநாகரிகக் காட்டுமிராண்டி ஜனங்களின் மூர்க்க வைஷம்யங்களினால் உலகம் அடையும் துன்பங்களை என்ன வென்று சொல்வது?

ஆகவே, ஐரோப்பாவின் நன்மைக்காக மட்டுமின்றி உலகத்தின் பாதுகாப்புக்காகவும் மனித வர்க்கத்தின் க்ஷேமத்துக்காகவும் ஐரோப்பாவைப் புனருத்தாரணம் செய்தே ஆக வேண்டும்.

குறைந்த பட்சம் இன்னும் நூறு வருஷத்துக்கு ஐரோப்பாவில் சுதந்திரம், சுயராஜ்யம் என்பது தலை காட்டக் கூடாது.

வேறு அன்னிய நாட்டார் யாரேனும் ஐரோப்பாவை ஆள வேண்டும்; ஆண்டு, ஐரோப்பியர்களைக் காட்டுமிராண்டித்தனத்திலிருந்து நாகரிகப் படுத்த வேண்டும்.

அதற்குத் தகுந்த அன்னிய நாட்டார் ஆங்கிலேயரைத் தவிர வேறில்லை.

ஐரோப்பா முழுவதிலும் இங்கிலீஷ்காரர்களின் ஆட்சியைப் பலமாக ஸ்தாபித்துவிட வேண்டும்.

ஐரோப்பாவிலுள்ள மக்கள் யாரும் துப்பாக்கி, கத்தி, கோடரி முதலிய ஆயுதங்களை வைத்துக் கொள்ளக் கூடாதென்று கடுமையாகச் சட்டம் செய்ய வேண்டும்.

ஐரோப்பிய மக்களிடம் க்ஷவரக் கத்திகளைக் கொடுப்பது கூட அபாயமாக முடியலாம்.

ஐரோப்பாவில் இவ்வளவு வேற்றுமைகளும் பிரிவினைகளும் குடிகொண்டிருப்பதற்கு ஒரு முக்கிய காரணம் அவர்கள் வெவ்வேறு பாஷை பேசி வருவதாகும்.

எல்லாருக்கும் பொதுவான ஒரு பாஷையைப் பள்ளிக் கூடங்களில் கற்பிக்க வேண்டும். அதற்குத் தகுந்த பாஷை இங்கிலீஷ்தான் என்று சொல்ல வேண்டியதில்லை.

எல்லா அரசாங்கக் காரியங்களும், கோர்ட்டு விவகாரங்களும் இங்கிலீஷிலேயே நடக்க வேண்டும். விஞ்ஞானம், அஞ்ஞானம் முதலிய சகல சாஸ்திரங்களையும் இங்கிலீஷிலேயே கற்பிக்க வேண்டும்.

இப்படியெல்லாம் நூறு வருஷ காலமாவது செய்து ஐரோப்பாவை நாகரிகப் படுத்திய பிறகுதான், அந்நாட்டு மக்களுக்குக் குடியேற்ற நாட்டுச் சுதந்திரமாவது கொடுக்கலாமா என்பது பற்றி யோசிக்க வேண்டும்.

* * *

யுத்தம் முடிந்ததும் பிரிட்டிஷார் மேற்கூறிய வேலையை ஏற்றுக் கொள்வதாயிருக்கும் பட்சத்தில் ஐரோப்பாவிலேயே பிரிட்டிஷாருக்கு வேண்டிய வேலை இருக்கும். ஆகையால், இந்தியாவை இந்தியர்களிடமே ஒப்படைத்து விட்டுப் போகும்படியாகத்தானிருக்கும்.

அதற்காக நாம் கொஞ்சமும் வருத்தப் படவில்லை; கவலைப்படவும் இல்லை.

இந்தியாவை நூற்றைம்பது வருஷமாக நாகரிகப் படுத்தி யாகி விட்டபடியால், இனியும் நாம் சுய நலத்துடன் பிரிட்டிஷாரை இங்கேயே இருக்கும்படி கேட்பது நியாயமாகாது.

முழுமனதுடனும் பூரண உற்சாகத்துடனும் பிரிட்டிஷாருக்குப் பிரிவுபசாரப் பத்திரம் படித்துக் கொடுத்து அநாகரிக ஐரோப்பாவை உத்தாரணம் செய்யும்படி அனுப்பி வைக்கச் சித்தமாயிருக்கிறோம்.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** சென்ற இதழில் வெளியான "கவலிக்கவில்லை" என்னும் ஜோக்குக்குப் பரிசு பெற்றவர்: டி. எஸ். குப்புசாமி, திருக்கழுக்குன்றம்.

# ஐரோப்பா உத்தாரணம்

இந்தியாவின் உத்தாரணத்தையும் புனருத்தாரணத்தையும் பற்றி எழுதி எழுதிக் கை சளித்து விட்டது.

இந்தியரின் விடுதலையையும், உருப் படுதலையையும் பற்றிப் பேசிப் பேசி வாய் சளித்து விட்டது.

இப்படி நம்முடைய காரியத்தையே நாம் கவனித்துக் கொண்டிருப்பது 'பரோபகாரம் இதம் சரீரம்' என்னும் பாரத நாட்டின் தர்மத்துக்கு முரண் பட்டதாகும்.

ஆகையால் இன்றைக்கு ஐரோப் பாவின் உத்தாரணத்தைப் பற்றியும் ஐரோப்பியரின் விமோசனத்தைப் பற்றி யும் கவனிப்போமாக.

'அயல் வீட்டுக் கன்றுக் குட்டியைப் பட்டினி போட்டால், நம் வீட்டுக் கன்று தானே அஜீரணத்தால் சாகும்' என்பது அருமையான பழமொழி யல்லவா?

*　　*　　*

ஐரோப்பாவைப் பற்றி நினைத்த வுடன், நமது உள்ளமானது அடால்ப் ஹிட்லரிடம் துள்ளி ஓடுகின்றது. நமது அறிவு, ஆவி, ஊன், உயிர், நரம்பு, நகம் எல்லாம் ஹிட்லரிடம் அனுதாபம் செலுத்துகின்றன. அடாடா! அந்த அஸகாய சூரருக்கு இப்பேர்ப்பட்ட கதி வந்து விட்டதே! இத்தாலியில் அவருடைய பெயரால் அமைந்த படை அரணானது பங்க படும் பாடு படுகிறதே! தூள் தூளா கிறதே! காற்றில் பறக்கிறதே!

இரண்டு வருஷத்துக்கு முன்னால் அடால்ப் ஹிட்லர் வெகு விருப்புடன் ஒரு காரியத்தைச் சொன்னார். "ஐரோப் பாவுக்குள்ளே பிரிட்டிஷார் எந்த இடத்திலாவது வந்து இறங்கட்டும், பார்க்கலாம். இறங்குவதற்கு நானே இடம் ஒழித்துக் கொடுக்கிறேன்!" என்றார்.

பிரிட்டிஷார் கடைசியில் இறங்கத் தான் இறங்கினார்கள். ஹிட்லர் இடம் ஒழித்துக் கொடுக்காமலே இறங்கி னார்கள். ஹிட்லர் இப்போது கட்டாய மாக இடத்தைக் காலி செய்து விட்டுப் பின்வாங்க நேர்ந்திருக்கிறது. காஸி னோவில் முற்றுப் புள்ளி போட்டு விட்ட தாகத் தோன்றிய பிரிட்டிஷ் படைகள் மறுபடியும் தீவிரமாக முன்னேறு கின்றன. காஸினோ விழுந்து விட்டது. 'ஹிட்லர் அரண்' தவிடு பொடி யாகின்றது.

வாஸ்தவம்; கொஞ்சம் சாவகாச மாகத்தான் தவிடு பொடி யாகின்றது. ஆனால், அதைக் குறித்து ஹிட்லரோ அவருடைய சகாக்களோ உற்சாகம் கொள்வதற்கு இடமில்லை.

உண்மையில் பிரிட்டிஷாரின் யுத்த தந்திர முறை இன்னதென்பதை அறிந் திருந்தால், ஹிட்லர் அப்போது அவ் விதம் வீருப்புப் பேசியிருக்கமாட்டார். பிரிட்டிஷார் எல்லாப் போர் முனைகளி லும் பின் வாங்குவதைப் பார்த்துப் பரிகசித்துச் சிரித்திருக்க மாட்டார்.

ஹிட்லர் மட்டுமல்ல, இன்னும் அநேகரும் அந்தக் காலத்தில் பிரிட்டி ஷாரைப் பார்த்துச் சிரித்தார்கள். சிரித்தவர்களுக்குப் பல் சுளுக்கிக் கொண்டதே தவிர பிரிட்டிஷாருக்கு ஒன்றும் நஷ்டம் ஏற்படவில்லை!

சென்ற முந்நூறு வருஷத்தில் பிரிட் டிஷார் எத்தனையோ யுத்தங்களில் ஈடுபட்டிருக்கிறார்கள். யுத்த ஆரம் பத்திலும் இடையிலும் அவர்கள் தோல்வியடைவதுண்டு; பின் வாங்குவ துண்டு: அதைப் பார்த்துவிட்டு உலகத் தார் சிரிப்பதும் உண்டு.

ஆனால் ஒவ்வொரு யுத்தத்திலும் கடைசிச் சண்டையில் பிரிட்டிஷார் தான் ஜயிப்பார்கள். அவர்கள் ஜயிக்கா விட்டாலும் மற்றவர்கள் அடைந்த ஜயத்தைத் தங்களுடையதாகச் செய்து கொள்வார்கள். ஜயத்தின் பலனைக் கட்டாயம் கைப்பற்றிக் கொள்வார்கள்.

பிரிட்டிஷ் யுத்த தந்திரத்தை விளக்கு வதற்கு ஒரு விகடத் துணுக்கைச் சொல்வதுண்டு.

ஒரு வீரன் போர்க்களத்தில் தான் நிகழ்த்திய அஸகாய சூரச் செயல்களை விவரித்துக் கொண்டிருந்தான்.

"எதிரிகளின் கால்களை எல்லாம் வெட்டித் தள்ளி விட்டேன்!" என்றான்.

"எதிரிகளின் தலையை யல்லவா வெட்ட வேண்டும்? காலை எதற்காக வெட்டினாய்?" என்று கேட்டார்கள்.

"அதற்கு நான் என்ன செய்வேன்? எதிரிகளின் தலைகளை எனக்கு முன்னு

லேயே யாரோ வெட்டிவிட்டார்களே!'' என்றானாம் அந்த வீராதி வீரன்.

பிரிட்டிஷ் யுத்த முறையை மேற்படி வீரனின் சாகஸத்துக்கு ஒப்பிடுவார்கள்.

இருக்கட்டும்; அதனால் என்ன? தலையை வெட்டினாலும் காலை வெட்டினாலும் போர்க்களத்தில் கடைசியாக யார் உயிரோடு நிற்கிறானோ, அவனுக்குத்தானே வெற்றி? அவன்தானே ஜயத்தின் பலன்களை அநுபவிக்க முடியும்?

அந்தச் சாமர்த்தியம் பிரிட்டிஷாருக்கு எப்போதும் உண்டு என்பது முந்நூறு வருஷத்துச் சரித்திரத்தில் வெளியாகியிருக்கிறது.

இந்த யுத்தத்தில் ஒருவேளை முடிவு வேறு விதமாயிருக்குமோ என்று யுத்த ஆரம்பத்தில் நம்மில் சிலர் பயந்துகொண்டிருந்தார்கள். ஆனால், ஹிட்லர் எப்போது ருஷியாவில் காலை வைத்தாரோ, அப்போதே அந்த பயம் நீங்கி விட்டது.

இந்த யுத்தத்தின் முடிவு மாமூல்படிதான் என்று தெரிந்து விட்டது. கடைசிச் சண்டையில் ஜயம் பிரிட்டிஷாருக்குத்தான் என்று ஏற்பட்டு விட்டது.

பிரிட்டிஷ் யுத்த தந்திரம் எல்லாம் ஹிட்லருக்கும் தெரிந்ததே. அதை அவர் பரிகாசமும் செய்திருக்கிறார். ஆனாலும், அவருடைய தலைவிதியும் பிரிட்டிஷாரின் அதிர்ஷ்ட ஜாதகமும் அவரைக் கண்ணைத் திறந்துகொண்டே படுகுழியில் விழும்படி செய்துவிட்டன.

ஹிட்லரின் தலைவிதியைப் பற்றி இனிமேல் சந்தேகத்துக்கு இடமில்லை.

ருஷியாவின் மகத்தான வீர சைன்யமானது ஜெர்மன் படைகளை ஆயிரம் மைல் துரத்திக்கொண்டு வந்து இப்போது ருஷிய எல்லைப்புறத்தில் பெர்லினை நோக்கிப் பாய்வதற்குச் சித்தமாய்க் காத்துக்கொண்டிருக்கிறது.

போர்க்களத்தில் எல்லாத் தலைகளையும் தாங்களே வெட்டி விட்டு, பிரிட்டிஷ் அமெரிக்கருக்குக் காலை வெட்டும் வேலையை மட்டும் கொடுக்க இஷ்டப்படாமல் தான், ருஷிய சைன்யம் எல்லைப்புறத்தில் நிற்கிறது.

மேற்கே இரண்டாவது போர் முனை தொடங்குவதற்கு மகத்தான ஆயத்தங்களை பிரிட்டிஷ்-அமெரிக்கர் செய்து வருகிறார்கள்.

தெற்கே இத்தாலிப் போர்முனை இத்தனை நாள் கொஞ்சம் அசமந்தமாயிருந்தது. இப்போது அங்கே கொஞ்சம் விறுவிறுப்பைக் காண்கிறோம்.

கிழக்கேயும் மேற்கேயும் தீவிரமான போர் தொடங்கும்போது, இந்தத் தெற்கு முனையிலும் விறுவிறுப்பு அதிகமாகும் என்பதில் சந்தேகமில்லை.

இவ்விதம் மூன்று பக்கங்களிலிருந்தும் கூடிய விரைவில் ஜெர்மனி தாக்கப்படப் போகிறது.

முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றி ஐயமில்லை.

நாஜிப் படைகள் எவ்வளவு தான் வீரதீரத்துடன் போர் செய்தாலும், கடைசியில் தோல்வியடைந்தே தீரப் போகின்றன.

விதி அவ்விதம் இருக்கும்போது வீரதீரங்களினாலோ தந்திர மந்திரங்களினாலோ என்ன செய்ய முடியும்?

* * *

ஜெர்மனி தோற்பது நிச்சயம் என்று எப்போது ஏற்பட்டதோ, அப்போது ஐரோப்பாவின் புனருத்தாரணத்தைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமும் ஏற்பட்டு விட்டது.

சென்ற முந்நூறு வருஷத்துச் சரித்திரத்தை மறுபடியும் யோசித்துப் பார்த்தோமானால், ஐரோப்பாவினால் உலகம் அடைந்திருக்கும் துன்பங்கள் கொஞ்ச நஞ்சமல்ல என்பது தெரியவரும்.

சுதந்திரத்துக்கும் ஸ்வராஜ்யத்துக்கும் உலகிலேயே நாதியற்ற பிரதேசம் ஐரோப்பாதான் என்பதையும் அறிவோம்.

பூகோள சாஸ்திரப்படி (வேலவின் பூகோளத்தின்படியும்தான்) ஐரோப்பாவானது ஒரே தேசமாக அமைந்திருக்கிறது.

ஆனால் ஐரோப்பிய மக்களோ அதை முப்பத்திரண்டு தேசங்களாகப் பிளந்து பிரித்துக்கொண்டிருக்கிறார்கள்.

முப்பத்திரண்டு தேசங்களிலும் முப்பத்திரண்டு பாஷை பேசுகிறார்கள்.

முப்பத்திரண்டு விதமான அரசாங்க அமைப்புக்களை வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

ரோமன் கதோலிக்கர், பிராடெஸ்டண்டு கிறிஸ்துவர் என்ற மதப் பிரிவினையும் துவேஷமும் தலைவிரித்தாடுகின்றன.

ஸாக்ஸன் சாதியார், லாடின் சாதியார், ஸ்லாவ் சாதியார் என்ற சாதிப் பிரிவினைகளும், அவற்றினால் விளையும் விரோதங்களும் தாண்டவமாடுகின்றன.

-உம்மன்


நாம் எல்லோரும் "மகாத்மா காந்திக்கு ஜே!" என்று கோஷம் போட்டு நமக்குள்ள அன்பைக் காண்பித்தால் போதும்!


'கோஷம் போட்டு அவருக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாது' என்று வைத்தியர்கள் சொல்கிறார்களே என்கிறாயோ? அவர்கள் சொல்வதைக் கேட்காதே!


நாம் தொண்டை கிழியக் கத்திவிட்டுக் கையைக் கட்டிக் கொண்டிருந்தால்...


சர்ச்சில் துரை கதறிக்கொண்டு வந்து சுயராஜ்யத்தை காந்தி மகானிடம் கொடுக்கிறாரா, இல்லையா பார்!


இப்படிச் சொன்ன காந்தி பக்தருக்கு மறுநாள் எப்பேர்ப்பட்ட ஏமாற்றம்!
சுடச்சுடச் செய்தி
அமெரியின் பழைய பல்லவி! தேக அசௌக்யத்தை முன்னிட்டு காந்தி விடுதலை செய்யப்பட்டார்!

# நிகழ்ச்சிச் சித்திரம்




















இந்தியப் பத்திரிகைகள் ஓயாமல் பெரும் போர் நடத்தி வருகின்றன. ஆனால் அதிகார வர்க்கத்தாருடன் போர் நடத்தி அறை குறையாய்ப் பெறும் சுதந்திரத்தையும் முதலாளிகளிடம் பறிகொடுத்து விடுவதாயிருந்தால், அதைப் போல் வருந்தத் தக்க காரியம் வேறொன்றுமில்லை. பத்திரிகை முதலாளிகளும் பத்திரிகை எழுத்தாளர்களும் வேறுபட்டிருக்கும் வரையில், பத்திரிகைகள் நேர்மையான முறையில் தொண்டு செய்ய முடியாது என்பது உலகெங்கும் அநுபவத்தில் தெரிய வந்திருக்கும் உண்மையாகும். ஸ்ரீ. டி. எஸ். சொக்கலிங்கமும் அவருடைய சகாக்களும் மேற்படி உண்மையை அநுபவத்தில் கண்டவர்கள். "முதலாளிகளின் வஞ்சகத்தை வெறுத்து வெளியேறிய பத்திரிகையாளரின் முயற்சியின் பலனே இப் பத்திரிகை" என்று விளம்பரமும் செய்திருக்கிறார்கள். அத்தகைய அநுபவத்தின் பேரில் உதயமாகியிருக்கும் "தினசரி"யானது உயரிய பத்திரிகை தர்மத்துக்கும் சுதந்திர எழுத்தாளரின் நேர்மைக்கும் சிறந்த உதாரணமாக விளங்கி வருமென்று பூரணமாக நம்புகிறோம்.

## கு. ப. ரா. ஞாபகார்த்தம்

தமிழ் நாட்டின் எழுத்தாளர்களுக்குள்ளே ஸ்ரீ கு. ப. ரா. வைப் போல் சகோதர எழுத்தாளரின் அன்பைக் கவர்ந்தவர் யாருமில்லை என்பது அவருடைய துயர மரணத்தின் பயனாகத் தெரிய வந்திருக்கிறது. ஆங்காங்குள்ள எழுத்தாளர்கள் கு. ப. ராவிடம் தங்கள் அன்பைக் காட்டுவதற்காகப் பற்பல முயற்சிகள் தொடங்கியிருக்கிறார்கள். சென்னை எழுத்தாளர்கள் அவருடைய குடும்பத்தின் உதவிக்காக நிதி வசூல் ஆரம்பித்திருக்கிறார்கள். சிதம்பரத்திலுள்ள 'இலக்கிய நண்பர்கள்' ஸ்ரீ கு. ப. ரா. வின் ஞாபகார்த்தமாகச் சிறுகதைப் பரிசு ஏற்படுத்த முன்வந்திருக்கிறார்கள். பிரதி வருஷமும் தமிழ் நாட்டில் வெளியாகும் சிறு கதைகளில் சிறந்த கதைக்கு ரூபாய் நூறு பரிசு அளிக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். ஸ்ரீ கு. ப. ரா. சிறிது காலம் ஆசிரியராயிருந்து நடத்திய "கிராம ஊழியன்" பத்திரிகையைச் சேர்ந்தவர்கள் அவருடைய நூல்களையெல்லாம் இரட்டி நல்ல முறையில் வெளியிட ஒரு பெரும்பிரயத்தனம் செய்யப்போவதாக அறிவித்திருக்கிறார்கள். இத்தகைய எல்லா விதமான முயற்சிகளுக்கும் தமிழ் மக்கள் பூரண ஆதரவு தர வேண்டுமாய்க் கோருகிறோம்.

## கால் நூற்றாண்டு சேவை

தேசத்துக்காக ஒரு சிறு துரும்பு எடுத்துப் போடாமல் சிலர் பெயரும் பிரசித்தியும் அடைந்து விடுகிறார்கள். வேறு சில உத்தமர்களோ வாழ்நாளெல்லாம் பொதுஜன சேவை செய்கிறார்கள்; ஆனால் அவர்களுடைய பெயரோ வெளியிலே தெரிவதில்லை. அப்படிப்பட்ட மௌனத் தொண்டு புரிந்து வருகிறவர்களில் ஸ்ரீ வி. ராகவய்யங்கார் எம். ஏ., எல். டி. ஒருவராவர். மகாகனம் சீனிவாச சாஸ்திரியார் முதலிய பல அறிவாளிகளை ஹெட் மாஸ்டராகப் பெற்றிருந்த மாயவரம் முனிசிபல் ஹைஸ்கூலில் இவர் இருபத்தைந்து வருஷம் ஹெட் மாஸ்டராகச் சேவை புரிந்துவிட்டு இந்த ஜூன் மாதத்தில் ஓய்வு எடுத்துக் கொள்கிறார். அபிப்பிராய பேதங்களுக்குப் பெயர் போன காவேரி நதி தீரத்தில் ஸ்ரீ வி. ராகவய்யங்காரின் உத்தம குணங்களைப் பற்றி மட்டும் எவ்வித அபிப்பிராய பேதமும் கிடையாது. மாணாக்கர்களாலும், பெற்றோர்களாலும், மற்ற ஆசிரியர்களாலும் பொது ஜனங்களாலும் ஒருங்கே போற்றப்பட்டவர். அவருடைய தூய்மையான எளிய வாழ்க்கையையும், இனிய சுபாவத்தையும், காந்திஜியிடம் அவருக்குள்ள மாசற்ற பக்தியையும், கதர் அபிமானத்தையும் பாராட்டாதவர் கிடையாது. அத்தகைய உத்தம புருஷருடைய ஞாபகார்த்தமாக அவர் தொண்டு புரிந்த பள்ளிக்கூடத்தில் ஓர் அரங்க மேடை நிர்மாணிக்க வேண்டுமென்று சில அன்பர்கள் தொடங்கியிருக்கும் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறோம். அதற்கும் தக்க பொருளுதவி செய்யுமாறு தேசமெங்கும் பரவியிருக்கும் மாயவரம் ஹைஸ்கூல் பழைய மாணவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறோம். பணம் பின் வரும் விலாசத்துக்கு அனுப்ப வேண்டும் :—எஸ். ரத்தினம், பொக்கிஷதார், வி. ராகவய்யங்கார் மெமோரியல் கமிட்டி, மாயவரம்.




# கல்கி

மலர் 3 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 33


# என்ன சேதி?

## "தினசரி" உதயம்

அன்புடனும் ஆர்வத்துடனும் மட்டற்ற மகிழ்ச்சியுடனும் குதூகலத்துடனும் தமிழ் நாட்டில் "தினசரி"யை வரவேற்கிறோம். தமிழகத்தில் சூரியன் உதயமாகி வருகிறவரையில் "தினசரி"யும் தினந்தோறும் உதயமாகி வர வேண்டுமென்று வாழ்த்துகிறோம். ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் அவர்களின் தேசிய ஜீவசக்தி ததும்பும் சுதந்திரத் தமிழை இனி தினந்தோறும் பார்க்கலாம் என்று எண்ணி உவகை கொள்கிறோம். "தினசரி" ஆரம்ப விழாவுக்கு ராஜாஜி தலைமை வகித்தது, தமிழ் நாட்டுக்கு அப் பத்திரிகை செய்யப் போகும் சுயநலக் கலப்பற்ற உத்தமத் தொண்டுக்கு அறிகுறியாகவும், ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் "தினசரி"யை ஆரம்பித்து வைத்தது பத்திரிகை தர்மத்தைச் சிறப்பாகக் கடைப் பிடித்துப் பல்லாண்டு சிரஞ்சீவியாக விளங்கப் போகிறது என்பதற்கு அறிகுறியாகவும் அமைந்தது குறித்து அளவில்லாத மகிழ்ச்சியடைகிறோம்.



## கோஷ் சகோதரர்கள்

இந்தியாவில் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கெல்லாம் ஆதர்சமாக விளங்கக்கூடிய பெயர்கள் ஸ்ரீ சிஷிர் குமார கோஷ், ஸ்ரீ மோதிலால் கோஷ் என்னும் பெயர்கள் ஆகும். இந்தச் சகோதரர்கள் எண்பது வருஷத்துக்கு முன்னால் "அமிருதபஜார்" என்னும் தங்களுடைய கிராமத்தில், "அமிருத பஜார் பத்திரிகை" என்னும் பெயர் கொண்ட பத்திரிகையை வங்காளியில் ஆரம்பித்தார்கள். அவர் வீட்டிலேயே அச்சுக்கூடம் ஏற்படுத்தி, அவர்களே எழுதி அச்சுக் கோத்து அச்சடித்துப் பத்திரிகையை வெளிப்படுத்தினார்கள். தேசத்தொண்டு ஒன்றையே இலட்சியமாகக் கொண்டு அந்தத் தீர சகோதரர்கள் ஆரம்பித்த பத்திரிகை எத்தனையோ விபத்துக்களையும் இன்னல்களையும் தாண்டி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வந்தது. ஒரு சமயம் வங்காள மாகாண சர்க்கார் 'அமிருத பஜார் பத்திரிகை'யை அடக்குவதற்கென்றே தேச பாஷைப் பத்திரிகைச் சட்டம் ஒன்று போட்டார்கள். இந்தச் சட்டம் பிறந்த மறுநாள் அமிருத பஜார் பத்திரிகை முழுதும் ஆங்கில பாஷையில் வெளியாயிற்று! அப்பேர்ப்பட்ட தீர சகோதரர்களின் வம்சத்தைச் சேர்ந்த ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் தான் — இன்றைக்கும் அப் பத்திரிகையின் சொந்தக்காரராகவும் பத்திராதிபராகவும் இருந்து திறம்பட நடத்தி வருகிறார். அப் பேர்ப்பட்டவரின் அதிர்ஷ்டக் கையினால் "தினசரி" ஆரம்பித்து வைக்கப்படுவது எப்பேர்ப்பட்ட நல்ல சகுனம் என்று சொல்லவும் வேண்டுமோ?

## சுதந்திர எழுத்தாளர்

பத்திரிகைச் சுதந்திரத்துக்காகவும், எழுத்துச் சுதந்திரத்துக்காகவும் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துடன்

ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி

# ஹரிச்சந்திரா வில்



**என். எஸ். கிருஷ்ணன்**
**டி. ஏ. மதுரம் . . . . .**

நடிக்கும்
**நகைச்சித்திரம்**
**N 18226.**



# "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்"

நீண்ட காலம் உபயோகிக்கக் கூடிய "எச். எம். வி." ஹைபிடெலிடி ஊசிகள்



ஒரு ஊசியினால் பல ரிகார்டுகளைப் பாடி வைக்கலாம். 10 ஊசிகள் அடங்கிய பாக்கெட் 1-க்கு ரூ. 2/4

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 3 } இதழ் 33 } 1944 மே 28 { தாரண ஞு வைகாசி 15

அரசியல்



இலக்கியம்



கதைகள்



கார்ட்டூன்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

பாரதத் தாயின் தொண்டுக்காகத் தங்கள் வாழ்நாளை அர்ப்பணம் செய்த மகான்களுக்குள்ளே ஸ்ரீ கோபாலகிருஷ்ண கோகலே ஒருவர். தம்மைப் போலவே தேச சேவைக்கு வாழ்க்கையை அர்ப்பணம் செய்தவர்களை அங்கத்தினராகக் கொண்டு "இந்திய ஊழியர் சங்கம்" (Servants of India Society) என்னும் ஸ்தாபனத்தை அந்த




மகான் பூனாவில் ஸ்தாபனம் செய்தார். அத்தகைய சங்கம் ஒன்று இன்னும் இருந்து வருவதாக நமக்கு நினைவூட்டிக் கொண்டு வருகிறவர் தக்கர் பாபா என்ற அருமைப் பெயரால் அழைக்கப்படும் ஸ்ரீ அமிருதலால் தக்கர் அவர்கள். ஹரிஜனங்களுக்கும் ஏழைகளுக்கும் ஒடுக்கப்பட்டவர்களுக்கும் தாழ்த்தப் பட்டவர்களுக்கும் தொண்டு செய்வதையே ஜீவிய நோக்கமாகக்கொண்டவர். இக் காரணத்தினால் காந்தியடிகளின் பரிபூரண நம்பிக்கைக்கும் பாத்திரமானவர். அகில இந்திய ஹரிஜனத் தொண்டர் சங்கத்துக்கு அரசியலில் ஈடுபடாத ஒரு சிறந்த காரியதரிசி வேண்டுமென்று மகாத்மா கருதியபோது, தக்கர் பாபாவைத்தான் தேர்ந்தெடுத்தார். இப்போது அன்னை கஸ்தூரிபாய் நிதிக் கமிட்டிக்குக் காரியதரிசியாகவும் அவரையே நியமித்திருக்கிறார்கள். மேற்படி நிதி வசூல் காரியத்தில் உதவி செய்வதற்காகத் தக்கர் பாபா சென்ற வாரம் தமிழ்நாட்டுக்கு வந்திருந்தார். அவரை அழைத்ததே அநாவசியம். தக்கர் வராமலே தமிழ்நாடு ஏழு லட்சம் ரூபாய் கொடுத்திருக்க வேணும் என்று நாம் கருதுகிறோம். இப்போது நாம் செய்ய வேண்டியது அவருடைய அருமையான காலத்தைக் கொள்ளை கொண்டதற்காக இன்னும் ஒரு லட்சம் ரூபாயாவது அதிகம் சேர்த்து எட்டு லட்சமாகக் கொடுப்பதே யாகும்.

# சென்னை கெயிட்டி டாக்கீஸில்

**27-5-1944 அன்று**

மகத்தான ஆரம்பம்!



தமிழ் நாட்டிலும் பெங்களூரிலும் வெற்றிகரமான
7 வது வாரமாக ஓடிக் கொண்டிருக்கிறது

கலைவாணி பிலிம்ஸ் M.U.A.C. தயாரித்த

# பர்த்ருஹரி

| | | |
|---|---|---|
| சாமா | - | ஜெயம்மா |
| கிருஷ்ணன் | - | மதுரம் |
| காளி N. ரத்னம் | - | ராஜகாந்தம் |

நடிப்பது



டைரக்ஷன் :

**K. சுப்பிரமணியம் & C. S. V. அய்யர்**

சென்னை கிரௌனிலும் கூடிய சீக்கிரம்
ஆரம்ப தேதியை எதிர்பாருங்கள்



விநியோகஸ்தர்கள் :

## ஸௌத் இந்தியா பிக்சர்ஸ் லிமிடெட்

காரைக்குடி

பிராஞ்சுகள் : மதுரை, கோயமுத்தூர், பெங்களூர், பெஜவாடா



# கொலம்பியாவில்

இஸ்லாமிய மதப்பாட்டுகள்

ஜனாப் N.P. அப்துல் காதர் பாடிய

புதிய ரிகார்டு




மக்காஸ்தலத்தின் மகிமையை விளக்குவது

ஏகநாயகனின் புகழ்பாடுவது

## சிறந்த ஹிந்துஸ்தானி பிலிம் ரிகார்டுகள்

கனூன் (கர்தார் புரொடக்ஷன்ஸ்)
G. E. 3290-93

வாபஸ் (நியூ தியேட்டர்ஸ்)
V. E. 2519-20

நயா தரானா (நவயுக்)
G. E. 3280-83

ஸவால் (கீதாஞ்சலி மூவிடோன்)
G. E. 3248-51, 3271

சங்கர் பார்வதி (ரஞ்சித்)
G. E. 3261-64

பிருத்வி வல்லப் (மினர்வா)
G. E. 3272

## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்:

முகமத் இப்ராஹிம் & கம்பெனி, சென்னை. வெஸ்டர்ன் டிரேடிங் கம்பெனி, மதுரை.
ஸௌத் இந்தியா மியூஸிக் எம்போரியம், சென்னை. S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி.
V. S. ராஜகோபாலன் & கம்பெனி, மதராஸ், பங்களூர், கோயமுத்தூர், சேலம்.
M. A. இருதயஸ்வாமி & கம்பெனி, உதகமண்டலம்.